


**ஸ்ரீமாதவாங்கிரி ஜலஜத்வய நித்ய ஸேவா**
**பரேமாவிலாசய பராங்குச பாதபக்தம்,**
**காமாதிதோஷஹரமாத்ம பதாச்ரிதாநாம ராமாநுஜம்**
**யதிபதிம் பரணமாமி மூர்த்நா.**

அழகு பொலிந்த எம்பெருமானது திருவடித்தாமரை யிணைகளை நிசசலும் தொழுகையிலுண்டான ப்ரேமத்தினால் கலங்கின திருவுள்ளமுடையரான நம்மாழ்வாருடைய திருவடிகளிலே அன்பு பூண்டவரும், தமது திருவடிகளைப் பணிந்தவர்களுக்கு காமம் முதலிய குற்றங்களைக களைந தொழிப்பவரும், யதிகளுககுத் தலைவருமான எம்பெருமானாரை தலையால் வணங்குகிறேன்.

*யதிராஜவிம்சதி — மணவாள மாமுனிகள் -1*

ஏப்ரல், 1985

# ஸப்தகிரி

இதழ் 11 மலா 15

தனிப்பிரதி ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முகபபில : 'இராமாநுஜர்' சித்திரம: திரு. கே. ஜெகதீஷ்

2-வது . அம்சவாகனத்தில ஸ்ரீ கோவிந்தராஜபபெருமாள்

3-வது : திருபபதியில் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீவேங்கடேஸ்வரா ஆரமபப்பள்ளி ஆண்டு விழா கலை நிகழ்ச்சிகள்.

பினனட்டையில : நாகலாபுரம் ஸ்ரீ வேதநாராயணசுவாமி கோயில் பிரமமோற்சவத்தின போது.

சிறப்பாசிரியர்
திரு. எஸ். லக்ஷ்மிநாராயண I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்.
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளா,
தி.தி. தேவஸ்தான அசசகம்,
திருப்பதி.

ஆசிரியர்.
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
THE WELFARE OFFICER
Publication Section, T.T.D
K. T. Road,
TIRUPATI.





# உங்களுடன்....

**வா**னத்தைப் பிளந்து கொண்டு பேரிரைச்சலுடன் சூறைக்காற்றுடன் கொட்டும் மழை நீரினை வேதங்களாகவும் உபநிஷத்துக்களாகவும் கருதினால் —அவ்வாறு பெய்யும் நீரானது பல மரங்களையும், கற்பாறைகளையும் புரட்டிக் கொண்டு மேலிருந்து விழும் காட்டருவி நீராக மாறிடும் போது அதனை இதிஹாஸங்களாகவும், புராணங்களாகவும் கொண்டால்—அம்மலையருவி நீரானது நிலத்தில் விழுந்து வெள்ளப் பெருக்கோடு புரண்டோடிடும் காட்டாறாக மாறிடும் போது அந்நீரினை ஆழ்வார்கள் மற்றும் நாயன்மார்கள் பக்திப் பாக்களாக கருதினால்—அவ்வாறு ஓடி வரும் காட்டாறு சிறு சிறு கிளைகளாகப் பிரிந்து கால்வாய்களாக உருவெடுக்கும் போது அவ்வோடை நீரினை ஆச்சாரியப் பெருமக்களின் பக்தி இலக்கிய படைப்புகளாகக் கொள்ளலாம். முதல் மூன்று நிலைகளில் உள்ள நீரினைக் கொண்டு மனிதன் மனவமைதியுடன் தன் தாகத்தினைத் தணித்துக் கொள்ள முயல்வது கடினம். ஆனால் ஓடை வழியாக தவழ்ந்து வரும் தெளிந்த நீரினை அமைதியான முறையில் எவரும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

வேதங்களிலும் உபநிஷத்துக்களிலும் உள்ள சமய, தத்துவக் கருத்துக்களை அடுத்த தலைமுறையினர் புரிந்து கொள்ள முடியாத நிலையில் இதிஹாஸங்களும் புராணங்களும் தோன்றின. அவற்றையும் அறிந்தின புறாத நிலையில் ஆழ்வார்களும், நாயன்மார்களும் அவற்றைப் பாக்கள் மூலம் பரப்பினர். ஆயினும், அப்பாக்களில், இறையுணர்வில் ஈடுபாடு கொண்டு தங்களை மறந்த நிலையில் அவர்கள் கொண்ட அனுபவமும், உள்ளக் கிளர்ச்சியையுமே நாம் பெரும்பாலும் காண நேரிட்டது. அக்கருத்துக்களை நாமும் புரிந்து கொண்டு, சுவைத்து அனுபவிக்க ஒரு உதவிக்கரம் நமக்குத் தேவைப்பட்டது. அக்கரங்கள்தாம், அவ்வடியார்களுக்குப் பின்வந்த ஆசாரிய பெருமக்களும், உரையாசிரியர்களுமாவர். அவர்கள் இந்து சமயத்திற்கு ஆற்றிட்ட தொண்டு மகத்தானது. இப்பணியில் முக்கிய பங்கு கொண்டவர்களில் முதன்மையாகக் கொண்டாடப்பட்டனர் ஸ்ரீ சங்கரா, ஸ்ரீ ராமானுஜர், ஸ்ரீ மத்வர் ஆகியோர். இவர்கள் மூவருள்ளும், சமயத்தில் ஒரு மறுமலர்ச்சியினையும், ஒரு சமுதாயப் புரட்சியினை ஏற்படுத்தித் தன்னிகரில்லா உயர்வு பெற்றவராவார் உடையவர், யதிராஜர், எம்பெருமானார், பாஷ்யக்காரர், இளையாழ்வார், லக்ஷ்மண முனி என்ற பல பட்டப்பெயர்களை கொண்ட நம் இராமானுஜர்.

பிரம்மனும் ஜீவனும் ஒன்றுதான் என்ற அத்துவைத கருத்திலிருந்து மாறுபட்டு ஜீவனும் பிரம்மனும் ஒன்றல்ல என்றும், ஜீவன் பிரம்மத்துடன் ஐக்கியமாக ஸ்ரீமந்நாராயணனிடம் பக்தி செய்தே கடைத்தேறலாம் என்று கூறி ஞான மார்க்கத்தை விட பக்தி மார்க்கமே சிறந்தது என்ற ஒரு புதிய கொள்கையினை – விசிஷ்டாத்துவைத கொள்கையினை ஏற்படுத்தி அன்றே சமய உலகில் ஒரு புதிய புரட்சியினை ஏற்படுத்தினார். பணிவும், பொறுமையும் ஒரு மாணவனின் சீரிய பண்பாகும் என்பதை திருக்கோஷ்டியூர் நம்பிகளிடம் திருமந்திரத்தின் பெருமையினையும், சரம ஸ்லோகத்தின் அருமையினையும் அறிந்து கொள்ள அவர் காட்டிய செயற்திறம் எடுத்துக் கூறும். அது மட்டுமா! சேரிவாழ் ஒருவருடன் கைகுலுக்கியதால் மட்டுமே ஒரு மாபெரும் புரட்சியினை செய்துவிட்டதாகக் கருதி கொள்ளும் தலைவர்கள் இருக்கும் இந்நாளில், அன்றே, தொள்ளாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, ஜாதி வேற்றுமை கடுமையாக அனுசரிக்கப்பட்ட சூழ்நிலையிலே, பெற்றவரைக் காட்டிலும் தன் வாழ்நாளில் அதிக முக்கியத்துவம் பெறும் தன் ஆசிரியரையும் உதாசீனப்படுத்தி விட்டு, தனக்கு நரகம் கிடைக்கப்பெறினும் சரி ஜாதி பேதமின்றி எல்லோரும் பயனுற வேண்டும் என்ற பேரவாவினால் ஊரறிய திருமந்திரத்தின் பெருமையினை உணரச் செய்த நம் இராமானுஜர் உண்மையிலேயே 'எம்பெருமானார்' தாம். கல்வி கற்பதிலோ கல்வி புகட்டுவதிலோ ஜாதி குறுக்கீடுகள் இருக்கலாகாது என்ற அவர் கொள்கைக்கு திருக்கச்சிநம்பிகளை தன் ஆசார்யனாகக் கொண்ட அவரும்,பல அரிஜனர்களை தன் சிஷ்யர்களாகக் கொண்ட அவர் சீர்மைப் பண்பும் சில எடுத்துக்காட்டுகளாகும். "இட்டார் பெரியார் இடாதார் இழிகுலத்தார்" எனும் பொருள் பொதிந்த வாசகத்திற்கு ஓர் முன்னுதாரணமாக விளங்கும் வகையில், வீடு தேடிவந்த பசித்தவன் ஒருவனுக்கு உணவு வழங்க மறுத்த தன் மனைவியின் செயலைக்கண்டு வருந்தி, யதிராஜனின் துறவறம் மேற்கொண்ட நிகழ்ச்சி விளங்குகிறது. அந்தணர்கள் மட்டுமல்லாது எச்சாதி திருமாலடியாரும் நாமம் தரிக்கலாம் என்ற அவர் எடுத்த முடிவும், அன்றே மேலகோட்டை பெருமாள் கோயிலுக்கு அரிஜனங்களை அனுமதிக்க அவர் மேற்கொண்ட துணிவும் அவரது பெருமைக்கும், பேராண்மைக்கும் ஒரு சில உதாரணங்களாகும்.

வேதஉபநிஷத் கருத்துக்களை அன்றைய சாமான்யனும் அறிந்து பயனுறும் வகையில் பல பாஷ்யங்களை மற்றும் வியாக்கியானங்களை எழுதியும், தென் பாரதத்தை 74 வட்டங்களாகப் பிரித்து ஒவ்வொன்றிற்கும் ஆசாரிய பீடம் ஏற்படுத்தி ஸ்ரீவைஷ்ணவம் செழித்தோங்கிட முக்கிய காரணகர்த்தரானார். வட நாடு சென்று வைணவ சம்பிரதாயத்தைப் பரப்பி, வைணவக் கோயில்களில் எங்கும் ஒரே வழிபாட்டு முறையினையும் அதன் வழிவகைகளையும் அமைத்துக் கொடுத்து வைணவ சமயத்திற்கு ஒரு புத்துணர்ச்சியினையும் புத்தொளியினையும் தந்திட்டு, 120 ஆண்டுகள் இப்புண்ணிய பாரதத்தில் வாழ்ந்து, இன்று' தானான திருமேனியாகவும், தான் உகந்த திருமேனியாகவும், தமர் உகந்த திருமேனியாகவும் விளங்கிடும் அவர் தாள் பணிந்து, அவர்தம் கொள்கையினை நாமும் உணர்ந்து பிறர்க்கும் உணர்த்திடுவதே நாம் அவர்க்குச் செலுத்திடும் நினைவஞ்சலிகளாகும்.

# ஓரான் வழியும் முதல் வானமாமலை ஸ்வாமியும்

"ஸ்ரீ இராமாநுஜ ஸமாரம்பாம்
இராமாநுஜ மத்யமாம் |
இராமாநுஜ பர்யாந்தம வந்தே
குருபரம்பராம் ||"

என்பது பெரியோர்கள் பணிந்து அனுசந்தித்து வரும் தனியனாகும். இதில் முதலாவதான இராமாநுஜன் கீதாசார்யனையும், இடையிலான இராமாநுஜன ஸ்ரீ பாஷ்யக்காரரையும், இறுதியிலான இராமாநுஜன் வானமாமலை இராமாநுஜ ஜீயரையும் அனுசந்தித்தபடி, இது தன்னையே "லட்சுமி நாத ஸமாரம்பாம்" என திருமகள் நாதனை துவக்கமாகவும் நாத யாமுன எம்பெருமானரை நடுவாகவும, மணவாள மாமுனியும அவரது பாத ரேகாம்ஸரான வானாசல முனிபர் யந்தமான ஓரான வழிக்கிரம ஆசாரியர்களை வணங்குகிறேன் என தனியன் முடிகிறது.

இதில் யதீந்திர ப்ரவணா ஈறாக ஓரான் வழிக்கிரமம் என பொதுவாக ப்ரஸித்தி இருப்பினும், இந்த க்ரமத்தில் மாமுனிகளின்பாதரேகாம்ஸரான ஒன்னை (முதல்) வானமாமலை இராமாநுஜ ஜீயரும் சேர்ந்தவரே என்பதை நிரூபிப்போம இங்கு.

விசதவாக்சிகாமணி ஜீயரை தமது பாதரேகாம்ஸமராய அபிமானித்தல் -

அழகிய வரதர் எனும பூர்வாஸரம திருநாமத்தை உடைய ஜீயர், மாமுனிகளின் திருவடி வாரத்திலே ஸகல ஸாஸ்திர, திவ்யப்ரபநத, ரஹஸ்யத்ரய வ்யாக்யானங்களை காலட்சேப பூர்ணமாக அதிகரித்து, அவருடைய நியமனத்தால் வானமாமலைக்குத் திரும்பி வந்து பெருமாளின் திருமுன்பே தெண்டம் ஸமர்ப்பித்து நிற்க, பெருமாளும் உகந்து ஸ்வாமிக்குத் தெணட காஷாயாதிகளைப் ப்ரஸாதித்து துரியாஸ்ரமத்தைக் கொடுதது வானமாமலை இராமாநுஜஜீயர் எனும் திருநாமமும் ப்ரஸாதித்து அருளினார். ஜீயரும் அதற்குப் பிறகு குருகூருக்கு எழுந்தருளி தமது ஆசார்ய ஸார்வபௌமரான மாமுனிகள் முன் தெண்டம் ஸமர்ப்பிக்க மாமுனிகளும் இவருடைய துரியாஸ்ரமத்திற்கு உகந்து "பொன்னடிக்கால் ஜீயரே வாரும்" என்று அபிமானபூர்வமாக அழைத்து அருளுகின்றார்.

அபிஷிக்தராக்கப்படல்

மாமுனிகள் தமது ஆசார்யரான ஸ்ரீசைலேஸா நியமனப்படியே வானமாமலை ஜீயரையும் அழைத்துக் கொண்டு தர்ஸனபரவர்த்தகத்திற்காக கோயிலை அடைந்து அரங்கனை மங்களாசாஸனம செய்தருளினா. அரங்கனும ஸவப்னமுகேன முதலியாண்டான் திருவம்ஸஸ்தரான கோயில் அண்ணன் முதலானாரை பெரியஜீயரான மாமுனிகள் திருவடிகளில் ஆஸ்ரயிக்கும்படி நியமித்து அருளினா. அண்ணனும தமது திருத்தம்பியரான அப்பாசசியாரண்ணா முதலானவர்களையும அழைத்துக கொணடு மாமுனிகளின மடமேற வந்து அஙகு வானமாமலை ஜீயரை புருஷகாரமாகக்கொண்டு மாமுனிகளை ஆஸ்ரயிகக, மாமுனிக்கும முதலில் கோயில் அண்ணனுககு பஞச ஸம்ஸ்காராதிகளைப் ப்ரஸாதித்து அனந்தரம் அருகில இருந்த வானமாமலை ஜீயரைக் காணபித்து "இவர் நமக்கு ப்ராண ஸுக்ருது முதலியாண்டான் வம்ஸத்தால நமக்குண்டான அதிஸயங்கள் எல்லாம் இவருக்கும் உண்டாகவேணும்" என்று தமது திருவுள்ளக் கருத்தை தெரிவிக்க, அண்ணனும் தமக்குப் பின்பாக இருந்த தமது திருதம்பிகளான அப்பாச்சியாரண்ணா முதலியவர்களை கடைக்கணிக்க அவர்களும் பெரிய ஜீயரை தெண்டம் ஸமர்ப்பித்து வானமாமலை ஜீயரிடம் ஆஸ்ரயிப்பிக்க வேணும் எனப் ப்ரார்த்தித்தார்கள்.

பெரிய ஜீயரும் அவர்களை தம் பக்கத்தில் இருத்தித் தம்முடைய பீடத்தினின்றும் எழுத்து அதில் வானமாமலை ஜீயரை எழுந்தருளச் செய்து தமது கையிலிருந்த ஆழ்வார்களை ஜீயருடைய கைகளில் சாதித்து அப்பாச்சியாரண்ணா முதலானவர்களுக்கு ப்ரஸாதாயும், அவ்விதம செய்வது நமக்கு உகப்பு என நியமித்தருள ஆசார்யாா கட்டளையை மீற முடியாத நிலையில் வானமாமலை ஜீயர் அப்பாச்சியரணணா முதலானவர்களுக்கு பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்தார். இதிலிருந்து மணவாளமாமுனிகள் ஸ்தானததில் முதலாவது வானமாமலை இராமாநுஜ ஜீயர் அபிஷிக்தராக்கபபட்டார் என்பது நிர்விவாதம்.

பிச்சு தோதாத்திர இராமாநுஜதாசன்,
B. A., B. Ed.,
கரந்தானேரி

இவ்விதம மாமுனிகள ஸ்தானத்தில் வானமாமலை ஜீயர் அபிஷிக்தராக்கப்பட்ட பேறு மற்றைய வேறு ஒரு ஆசார்யர்களுக்கும் கிட்டவில்லை என்பதும், மாமுனிகளுக்கு அடுத்தபடியாக வானமா

(47-ம் பக்கம் பார்க்க)

# கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்

ஒப்பு உவமை இல்லாததாய், நிலேயானதாய், பேரானந்தத்தை வழங்குவதாய்த் திகழுகிறது வைகுந்தம்.

இங்கு எம்பெருமான் தன் அழகுத் திருமேனி ஆபரணங்களால் பொலிந்திட, பெரிய பிராட்டியார் மற்றும் பூமி, நீளா பிராட்டியார்களோடு கூட, ஆனந்தமயமான இரத்தின மண்டபத்தில் கோப்புடைய சீரிய சிங்காதனத்தில் எழுந்தருளி கொலு வீற்றிருக்கிருர்.

இக் கோலாகல வைபவந்தனேக் கண்டுகளிக்கும் பாக்கியம் பெற்றவர்களாய் நித்திய சூரிகளும், நித்திய முக்தர்களும் திகழகிருர்கள். இப்பாரினிலுள்ளோரும் இவ்வானந்தம் பெறவாயப்பிருநதும, அதனே இழந்து, அதற்காக யாதொரு கவலேயுமின்றி சம்சாரக் கடலில் சிககித் தவிக்கின்றனர்.

கறப்போர் உரிய காலத்தில் கறவாமையால் பசுக்களுககு முலேக் கடுப்பு ஏற்படுகிறது. அதன் கன்றுகளோ அப்பால கட்டப்பட்டுக கிடக்கின்றன. முலேக்கடுப்புக் கிடக்க, கன்று பசியால் என்ன பாடு படுகிறதோ என பசு ஏங்குகிறது. கனறு முலேயிலே வாய வைததுச் சுவைப்பதாய், நினேவின் முதிர்ச்சியால், யாரும் கை வையாத நிலேயில் தானே பாலேச் சொரிகிறது.

''கனேத்திளங் கற்றெருமை கனறுக்
கிரங்கி
நினேத்து முலே வழியே நின்று பால்
சோர''

என எம்பெருமானின் வாத்ஸல்யத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாய் அமையும்படி சூடிக்கொடுத்த சுடர்க்கொடி அருளிச் செய்தனள்.

சம்சாரக் கடலினின்றும் கரை காணுது தத்தளிக்கும் சம்சாரிகள் உய்யும வண்ணம எம்பெருமான் இராமனுய்க் கிருஷ்ணனுய்த் தன்னேத் தாழ விட்டுக்கொண்டு, மனித சாதியினனுய் அவர்கள் மத்தியிலே அவதாரம் செய்தருளுகிருர்.

எம்பெருமானின் ஸௌலப்யம் (நீர்மை) பிரகாசிபபது கிருஷ்ணுவதாரத்திலேதான். கரும்பு தின்னுவோர் சோகை மிகுந்ததான நுனிப் பாகத்தைக் கழித்து விடுகின்றனர்.

---

திரு. வி. ராகவன்—பள்ளத்தூர்.

---



வேற் பற்றுன அடிப பாகத்தையும் நீக்கி விடுகின்றனர். பின் சுவையுள்ள மத்திய பாகததைச் சுவைக்கின்றனா. அது போன்று, இறைமைத் தனமையுடன் (பரததுவம்) ஒப்பிடக் கூடியவற்றை நீக்கி, கம்ஸ வதத்திற்குப பின்னதைக் கழித்து, கணணன் வெணணெய் களவு செயதான, அகப்பட்டுக் கயிற்றுலே கட்டுண்டுக கிடக்கிருன் என்பதன்ருே அனுபவிக்க இனிமையாய் அமைகினறது!

களவுகள் உலகினில் நடக்கவில்லேயா? அகப்பட்டுத் தண்டனேயும அடையவில்லேயா? அவறறிற் இல்லாத ஈடுபாடு கண்ணன் களவினில் மட்டும் ஏன்?

துர்வாஸ முனிவரின் சாபத்திற்குள்ளாகிருர்கள் இந்திரனுள்ளிட்ட தேவர்கள். தங்கள் சம்பத்தையெல்லாம் இழந்து தவிக்கின்றனர். திருமாலேயும் சரணடைகின்றனர்.

இவர்களை முன்னிட்டுக்கொண்டு பாற்கடலைக் கடைகிருர். அமுதமும் எடுக்கிருர். எடுத்த அமுதத்தினை அவர்களுக்கு வழங்கி அவர்கள் துயர் தீர்த்த அப்பரமனன்றே வெண்ணெய் களவு கண்டு கட்டுண்டு கிடப்பது!

இந்த எளிமை சம்சாரிகள் பக்கலிலோ அல்லது பரத்துவத்திலோ காணக் கிடைக்குமோ?

''மத்துறுகடை வெண்ணெய்
களவினில் உரவிடையாப்புண்டு
எத்திறம்! உரலினெடு இணைந்திருந்
தேங்கிய எளிவே'' என

நம்மாழ்வார் எம்பெருமானின் பரத்துவத்தை நினைந்து, தெளிந்து உபதேசம் செய்தருளினுர். அவன் எளிமையை நினைந்தார்; ''எத்திறம்'' என ஆறு மாத காலம் மோஹித்துக் கிடந்தார்!

தொல்லை இன்பத்திறுதிகண்ட யசோதையின கண்கள் அவள் கண்டு அனுபவித்த மழலை தந்த இன்பம் அவன் செய்த தீம்புகள் கண்டு ஏற்பட்ட களிப்பால், அழகாகத் தோன்றுகின்றன. ஆதலாலன்றே திருகோதை நாச்சியாரும் ''ஏரார்ந்த கணணி யசோதை'' என அவள் கண்ணின் அழகை சிறபபித்து அருளினுள்.

இத்தாய் அனுபவித்த இுன்பத்தில் கட்டுண்ட பெரியாழ்வாரோ, தாயின் உடையில், மழலைக் கண்ணனை தொட்டிலிலிட்டு இனிமையாய்,

'' மாணிக்கங்கட்டி வயிரமிடைகட்டி
ஆணிப்பொனுல் செய்த வண்ணச்
சிறுதொட்டில்
பேணி உனக்குப பிரமன் விடு
தந்தான்
மாணிக்குறளனே! தாலேலோ
வையமளந்தானே! தாலேலே''

ஆனந்தமாய்த் தாலாட்டுப் பாடி துயில் கொள்ளச் செய்கிருர். மேலும் தாயின் பாசத்திற்குச் சிகரமாய்,

''குடையும் செருப்பும் கொடாதே
தாமோதரனை நான்
உடையும கடியன ஊன்று வெம்பரற்
களுடை
கடிய வெங்கானிடைக் காலடி
நோவக் கன்றின்பின்
கொடியேன் என்பிள்ளையைப்
போக்கினேன் எல்லே பாவமே!

கொளுத்தும் வெய்யிலில், கல்லும் முள்ளும் நிறைந்த காட்டை நோக்கி, கால்கள் நோவுகொள்ளும் படியாய், குடையும் செருப்பும் கொடுக்காது, கன்றுகள் பின் என் பிள்ளையை அனுப்பி வைத்தேனே மகா கொடியவளாகிய நான் என்று பரிதவிககிருர்!

பெற்றெடுத்தாலும் குழந்தையின் பம் ஒன்றினையும் அனுபவியாதவள் தேவகி, வளர்த்தவளாய் யசோதை அத்தனையையும் அனுபவித்தாள். அத்தேவகியின் தன்மையில் குலசேகரப்பெருமாள், ''வெகுளியாய் நின் ுரைக்கும அவவுரையும்'' அதாவது கண்ணன் குழந்தையாய் வாரி வாரி வழக்கும் மழலை மொழி ஒன்றினையும் கேட்டு மகிழாதவளுனேன் எனவும், ''வாரி வாய்க் கொண்ட மிச்சல் உண்ணப் பெற்றிலேன்'' அதாவது கண்ணன் தன் அழகிய பிஞ்சுக் கரங்களாலே அளைந்து அமுது செய்யப்பட்டு மிகுந்ததை உணணும் பாக்கியம் கிடைக்கவில்லையே எனவும, ''ஒன்றும் கண்டிடப் பெற்றிலேன்'' குழந்தை விளையாட்டு ஒன்றினையும் தான் கண்டு களிக்கும் பாக்கியத்தையும் இழந்தேனே என ஏங்கித் தவிப்பதையும் விளக்குகிருர்.

''வெண்ணெய் விழுங்கி வெறுங் கலத்தை வேற்பிடையிட்டு'' என உரியிலே தொங்கும் தாழி நிறைந்த வெண்ணெய் அத்தனையையும் வாரி வாரி அமுது செய்துவிட்டு, வெறும் பாத்திரத்தை உருட்டி விட்டு உடைத்தவன் எனப் பொல்லாங்கு பல பெற்று இன்று நமக்கு இனிய அனுபவப் பொருளாய்த் திகழுகிருன்.

வெண்ணெய் உண்ணும் செயலாலே, நித்தியமான இச்சீவாத்மாவை பரமாத்மா ஆகிய தான் வெண்ணெயை உண்பது போல் தன்னுள் கலக்கச் செய்து வெற்றுப் பாண்டமான இச்சரீரத்தையன்றே எறிகிருன் என்ற தத்துவமன்றே புலப்படுத்தப்படுகிறது.

'' .........மத்தாரப் பற்றிக் கொண்டு
ஏராரிடை நோவ எத்தனையோர்
போதுமாய்
சிரார் தயிர் கடைந்து''

என சிறிய திருமடலில் திருமங்கை மன்னன் அனுபவித்தவாறு, யசோதை வைகறையில் எழுந்து திருவிளக்கின் முன் அமர்ந்து, மத்தை நன்ருக அழுத்திப் பிடித்து, நீண்ட நேரம் இடுப்பு நோவ தயிர் கடைகிருள்.

தாழியிலே வெண்ணெய் திரண்டு மிதந்து வருகிறது. அப்பொழுது கண்ணன் விளக்கின் நிழலிலே, பதுங்கிப் பதுங்கி மெதுவாய் வந்து தாய் அறியா வண்ணம் அத்தனை வெண்ணெயையும் உண்டு விடுகிருன் என நம்மாழ்வார் அனுபவிக்கிருர்.

திரண்ட வெண்ணெயினை வேருேர் கலத்திலிட்டு உரியின்மீது பாங்காய் வைத்து வேறு வேலையாய் வெளியே செல்லுகிருள். தூங்குவதுபோல் பாசாங்கு செய்துகிடந்த கண்ணன் இப்பொழுது, ''பொத்த உரலைக் கவிழ்த்து அதன் மேலேறி'' என பெரியாழ்வார் அனுபவித்தவாறு பக்கத்தே கிடந்த ஓர் பழைய உரலை எடுத்துப் போட்டு அதன்மேல் ஏறுகிருன். ''தாரார் தடந்தோள்கள் உளளளவும் கை நீட்டி'' என தோள் அளவு வரை கையைப் பானைக்குள் விட்டுத் துழாவுகிருன்.

''ஆழவமுக்கி முகக்கினும் ஆழ் கடல் நீர் நாழி முகவாது நாஞழி'' என, எவ்வளவு ஆழம் கைவிட்டுத் துழாவினுலும் கைகொண்ட மட்டுமே எடுக்க முடியும் என்பதையும் அறியாத அப்பாவியைப் போல் தோள் அளவு கைவிட்டுத் துழாவி வெண்

ணெயை எடுத்துத் தின்கிறான்; பின்னர் யாதும் அறியாதவன்போல் முன் தான் சயனித்திருநத இடத்தில் துயில் கொள்ளச் செல்கிறான்.

வீடு திரும்பிய யசோதை தான் வைத்துச் சென்ற வெண்ணெயைக் கண்டாளில்லை. மாறாக, தன்னைக் காட்டிக் கொடுக்கும் வண்ணம் "விரலொடு வாய் தோய்ந்த வெண்ணெய் கண்டு" என முகம் வாய், தோள் பட்டை, கைவிரல்கள் யாவும் வெண்ணெய் அப்பிக் கிடக்க பொய்யுறக்கம் கொள்ளும் கண்ணனைக் காணுகிறாள்.

ஐயோ! இத்தனை வெண்ணெயையும் உண்டால் உடம்புக்கு ஆகுமோ எனப்பதறி, மிகுந்தகோபம் கொண்டு அவ்வுரலோடு சேர்த்து அவனைக் கட்டிப் போடவிழைகிறாள்.

இதனை முன்னமேயே அறிந்தவன் போல் கிடந்த கயிறுகள் அத்தனையையும சிறுசிறு துண்டுகளாக அறுத்து வைத்திருந்தான். நல்ல கயிறுகளோ பசுக்களைக் கட்ட எடுத்துக் கொண்டாய் விட்டது. ஆகவே இத்துண்டுகளையெல்லாம் ஒன்று சேர்த்து முடிந்து இவனைக் கட்ட முயலுகிறாள். இவனைக் கட்ட எட்டம் போதவில்லையே! எவ்வளவு சேர்த்து முடிந்தும் இவனைக் கட்டுவதற்குப் போதவில்லை. வேறு கயிறு தேடிப் போனாலோ, இவன் சிட்டாய்ப் பறந்து விடுவானே இங்கிருந்து. பின்னர் இவனைப் பிடிப்பது அரிதே. என் செய்வாள். திணறுகிறாள். பெரு மூச்சு விடுகிறாள். நெற்றியிலே வியர்வை வழிந்தோடுகிறது.

இப்பரிதாப நிலையைக் கண்டு இவள்மீது இரக்கம் கொள்ளுகிறான். இவள் கட்டும கட்டுக்குள் தனனைப் பிணைத்துக் கொள்ள நிச்சயிக்கிறான். ஆகவே தன அழகிய திருமேனியை எக்கித் தன் இடையிலே கட்டும்படியாய்க் காட்டிக் கொடுக்கிறான். அவளும் அவனைக் கட்டிப் பெருமூச்சு விடுகிறாள்!

"எட்டினோடு இரண்டெனும் கயிற்றினால் மனந்தனைக் கட்டி" என திருமழிசைப்பிரான் அருளியவாறு எட்டோடு இரண்டைக் கூட்டினால் பத்து ஆகிறது. அதாவது பதது என ஆகிற பக்தியாய் அக்கயிறு கொண்டு அலை பாயும் மனத்தினைக் கட்டி பல்லாண்டு காலம் கிடப்போராலும் கட்ட முடியாதவன் இன்று ஓர் அபலையின் கட்டுக்குள் சிக்கிக் கிடக்கிறான்.

சம்சாரக் கடலிலே கட்டுண்டு கிடக்கச் செய்பவனும், அக்கட்டைத் தன் அருளாலே அறுத்தெறிபவனுமாகிய அவனே கட்டுண்டு கிடக்கிறான்! நம் பழவினையால் ஏற்பட்ட கட்டை அவன் அறுத்தெறிவது போல் தன் இச்சையாலே கட்டுண்டு கிடப்பதை அறுத்தெறிய முடியாதே! பகதிப் பாசத்தோடு கட்ட முனைந்தாலும் தன்னைத் தானே கொடுத்தால்தான் முடியும் போலும்!

தாயின் கட்டுக்கு உடன்பட்டுக் கிடப்பது, தான் இங்கு வந்து பிறந்து படைக்க நினைத்த நீர்மைக்குணம் நந்தா விளக்குப் போல் பிரகாசிக்கச் செய்கிறது. ஆகவே "கண்ணியார் குறுங்கயிற்றால் கட்டுண்டான்" என்றவாறு பல முடிச்சுக்களை உடைய பழைய கயிறு அது. அவன் இடையை அழுத்தித் தழும்பையும் உண்டாக்குகிறது. ஆயினும் தனக்குப் பிரியமானவள் மல்லிகை மாலையாலே கட்டினால் இசைந்து கிடப்பவன் போல் இவள் கட்டுக்குள் அடங்கிக் கிடக்கிறான்.

'துறுதுறுக்கையாய் ஊர் பூசல் விளைவித்தவனன்றோ நீ! உனக்கு வல்லமை உண்டானால் இப்போது போ பார்க்கலாம்' என சூள் உரைத்து அவனை அடிக்கவும் முனைகிறாள்.

அந்நிலையில், "அழுகையும் அஞ்சி நோக்கும் அந்நோக்கும் அணிகொள் செஞ்சிறு வாய் நெளிப்பதுவும் தொழுகையும்" என் குலசேகரப் பெருமான் அருளியவாறு பால் வடியும் தன் முகத்தே பயம் குடி கொள்ளப் பார்க்கிறான். தன் அழகிய திருமேனி நடுங்க, தேம்பித் தேம்பி அழுகிறான். பார்க்கப் பரிதாபமாய் தன் சிவந்த அதரங்கள் துடிக்கத் தன் இருகைகளையும் கூப்பி தாயைத் தொழுகிறான் அவள் கட்டிலிருந்து விடுபட!

அவனியிலுள்ளோர் அவனைத்தொழ ப்ராப்தமாயிருக்க, அப்பரமனன்றோ இன்று கைகூப்பித் தொழுகிறான்! இத்தால் சம்சாரக் கட்டிலிருந்து விடுபட சம்சாரிகள் தன்னை இரு கரங்கூப்பித் தொழுதாலே போதுமானது என நமக்குப்புரிய வைக்கிறார் போலும்! ★

## அடுத்த மாதத்தில்.....

| | |
|---|---|
| 3—5—85 | ஸ்ரீ நரசிம்ம ஜெயந்தி |
| 3—5—85 | நாகலாபுரம் ஸ்ரீ வேதநாராயண சுவாமி கோயில் பிரம்மோற்சவம் ஆரம்பம் |
| 7—5—85 | ஸ்ரீவேத நாராயண சுவாமி கோயில் கருடசேவை |
| 10—5—85 | ஸ்ரீவேத நாராயண சுவாமி கோயில் திருத்தேர் |
| 14—5—85 | திருபபதி கங்க ஜாத்திரை |
| 14—5—85 | ஹனும ஜெயந்தி |
| 25—5—85 | திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி கோயில் பிரம்மோற்சவம் ஆரம்பம் |
| 29—5—85 | திருச்சானூர் ஸ்ரீபத்மாவதி தாயார் கோயில் தெப்போற்சவம் ஆரம்பம் |
| 30—5—85 | நாராயணவனம் ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில் பிரம்மோற்சவம் ஆரம்பம் |

# அருணகிரியாரின் திருவுள்ளம்

**திரு. S. ராஜகோபால்**
அம்மாண்டிவிலை.

கடவுள் ஒருவராலும் அவரைப் பல உருவங்களில் வழிபடும் வழக்குப் பாரத நாட்டில் இருந்து வருகிறது. சைவம், வைணவம் என்ற இரண்டு பெரிய ஆறுகள் சங்கமம் ஆகின்ற பெரும் கடல் இந்து சமயம். இவற்றின் கிளைகள் பல சமயங்களாக உருவெடுத்திருக்கின்றன. சிவபெருமானை வழிபடுவோர் எல்லோரும் ஒரே கருத்தைக் கொண்டவர்கள் என்று சொல்ல இயலாது. சமயத்திற்குத் தலைவராக ஒரே கடவுளை வழிபட்டாலும், இறைவன், உலகம், உயிர் ஆகியவற்றின் தொடர்புகள், முத்தியின் இயல்பு என்ற கருத்துக்களில் பல வேறுபாடுகள் இருக்கும். துவைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம், வீர சைவம் முதலிய வேறுபாடுகள் வழிபடும் மூர்த்திகளின் வேறுபட்டால் அமைந்தவை அல்ல. உயிர், உலகம், கடவுள், முத்தி ஆகியவற்றைப் பற்றிய கருத்து வேறுபாட்டால் அமைந்தவை. வழிபாட்டு முறையில் எந்த வகையைப் பின்பற்றுபவர்களாக இருந்தாலும் பலருக்கு வழிபடுகின்ற கடவுள் சிவபெருமானாக இருப்பார். வேறு பலருக்கு திருமாலாக இருப்பார்.

சிவபெருமானைத் தொழுகின்ற கூட்டத்திற்குச் சிவபிரானையன்றி, அம்பிகை, முருகன், விநாயகர், வீரபத்திரர், பைரவர் முதலிய பல வழிபடும் மூர்த்திகள் உண்டு. அம்பிகையின் மூர்த்தங்கள் பல. முருகப் பெருமானின் கோலங்களும் பலப் பல. விநாயகப் பெருமானும் வெவ்வேறு சந்தர்ப்பங்களில் ஏற்றுக் கொண்ட கோலங்கள் பல உண்டு. இப்படியே திருமாலின் திருஅவதாரங்கள் பல. அந்த அந்த அவதாரத்திலும் வெவ்வேறு கோலங்கள் பக்தர்களின் வழிபாட்டுக்கு உரியனவாக இருக்கின்றன.

நாட்டின் சில சில பகுதிகளில் சில சில மூர்த்திகளிடத்தில் பேரன்பு வைத்து வழிபடும் அன்பர்கள் மிகுதியாக இருப்பார்கள். வங்காளத்தில் கண்ணனைக் கும்பிடுவாரும், பராசக்தியைக் கும்பிடுவாரும் அதிகம். மகாராஷ்டிரத்தில் விநாயக வணக்கம் சிறப்பாக இருக்கிறது. அயோத்தி முதலிய இடங்களில் ஸ்ரீராமனைப் போற்றுவார் மிகுதி. சிவபெருமானையே சிறப்பாகக் கொண்டாடுகின்றவர்கள் காஷ்மீரத்தில் பலர் உண்டு. தென்னாட்டில் கன்னடப் பகுதிகளில் வீர சைவர்கள் எனச் சொல்கின்ற லிங்காயதர்களுக்கும் சிவபெருமானே பிரதான மூர்த்தி. தமிழ் நாட்டில் சைவம் மிகச் சிறப்பாக வளர்கிறது. முருகனை வழிபடும் கடவுளாகக் கொண்டு வாழும் மக்கள் பலர் இங்கே இருக்கிறார்கள். முருகனுக்குப் பல கோயில்களைச் சமைத்து வழிபடுவதில் சிறப்புற்றது தமிழ்நாடு. வடநாட்டில் முருகனைப் பற்றிய வரலாறே பலருககுத் தெரியாது. முருகனுடைய கதைகளும், முருகனைப் பற்றிய தத்துவ உணர்வும் தமிழ்நாட்டில்தான் மிக மிக அதிகம்.

பழங்காலம் முதற்கொண்டு முருகனை வழிபட்டுப் பேறு பெற்ற பெரியோர்கள் பலர். சங்க நூல்களில் முருகனைத் தமிழ் நாட்டார் வழிபட்ட வகைகளைப் பரக்கக் காணலாம். இந்த நாட்டில் இருந்த பல வகையான மக்களும் முருகனிடத்தில் ஈடுபட்டனர். நாகரிகம் இல்லாத, எந்த உணவையும் உண்ணும் வாழ்க்கையை உடைய மலைநாட்டு வேடர்கள் முதல், விரதம் இருந்தும் இந்திரிய நிக்கிரகம் செய்தும், ஜப தபம் முதலியவற்றால் வழிபட்டும் வாழ்ந்த முனிவர் வரையில் யாவரும் அவனை வணங்கினார்கள்: ஆங்காங்குப் பலவகையான கோயில்கள் இருந்தன. பல விழாக்களைக் கொண்டாடினார்கள். ஆறு படை வீடுகள் என்று சொல்கின்ற தலங்கள் மிகப் பழங்காலம் முதற்கொண்டே தமிழ்நாட்டில் இருந்து வருகின்றன என்று திருமுருகாற்றுப் படையினால் நாம் அறிகிறோம். பரிபாடல் என்ற நூலில் மதுரை மாநகரத்தில் வாழ்ந்த மக்கள் திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமானிடத்தில் பேரன்பு வைத்து வழிபட்டுத் தத்தமக்கு வேண்டிய நலங்களைப் பெற்றார்கள் என்று தெரிய வருகிறது.

பிற்காலத்திலும் முருகப் பெருமானை வழிபட்ட அடியார்கள் பலர் இந்த நாட்டில் வாழ்ந்திருக்கிறார்கள். அவர்கள் பாடிய பாடல்கள் பல. அவர்களுள் முருகப் பெருமானின் திருவருளில் ஈடுபட்டு மிக மிக விரிவாகத் திருப்புகழ் என்ற பெரிய பாக்கடலை வழங்கியவர் அருணகிரி நாதர். அவருடைய திருவாக்கினால் முருகப் பெருமானின வீரச் செயல்களும், புகழும், அருளும், சிறப்பும் விளங்குகின்றன. அவை அல்லாமல் நம்முடைய பழைய பண்பாட்டின் வகைகள், பல துறைகளாக விரிந்த சமய நுட்பங்கள் ஆகியவையும் அவர் வாக்கில் விளங்குகின்றன. அருணகிரிநாதர் பெரிய தமிழ்ப் புலவர். முருகன் அடியார், ஞானி, யோகி:

41-ம் பக்கம் பார்க்க.

# சூர்யனும் நாராயணனும்

செல்லம் ஸ்ரீநிவாஸன்,
திருப்பதி.

ப்ரபஞ்சத்தை ரக்ஷிக்கும் கடவுளான ஸ்ரீமஹாவிஷ்ணுவின் அவதாரங்கள் பலப்பல. அவைகளும் பூலோகத்திலேயே ஸம்பவித்தன. ஏனெனில் துக்க ஸாகரமான சம்ஸாரத்தில் மூழ்கியுள்ள அநேக பாமர மக்களை உஜ்ஜீவிக்கும்படியும் மேலும் அவர்களுக்கு நிரந்தரமான சுகத்தையளித்து தன்னிடத்தே தக்க வைத்துக் கொள்ள வேணுமென்று நினைத்துத்தான் பல அவதாரங்களை மேற்கொண்டான். அவைகளில் முதலாமவதாரம் எனக் கருதப்படுகிறது மச்சாவதாரம்.

இந்த மச்சாவதாரத்தைப் பற்றி இங்கு யாம் விரிவாக சில விஷயங்களை நோக்குவோம். இந்த மச்சாவதாரம் எதற்காக எடுக்கப்பட்டது, எங்கு அவதாரம் செய்தார், அவதாரத்தில் முக்யமான நோக்கமேதேனும் உண்டா? என்று பார்ப்பதும் தெளிவதும் மிக அவசியம்.

ஒரு தேசத்தை ஆளும் அரசன் ஒருவன் ஸர்வ வல்லமை படைத்தவனாயிருப்பினும், 'एकाकी न रमते' (ஏகாகீ ந ரமதே) எனும் சாஸ்திரம் சொல்லுமாப் போலே, முக்யாதிகாரங்களை தன்னகத்திலே வைத்துக் கொண்டு இதர கார்யங்களிலே-அதாவது ஸேனை-தானம்-தாமம்-ஆலோசனை முதலிய கார்யங்களுக்காக-தண்ட நாயகன்-தானாதிகாரி-புரோகிதர்-மந்திரி-மகா மந்திரி முதலியவர்களை நியமித்துத் தன் ராஜ்ய பரிபாலனம் எப்படி நடத்துகிறானோ அதுபோல் ஈரேழு பதினான்கு லோகங்களையும் ஸ்ருஷ்டித்து அதை ரக்ஷித்து, அழிக்கும் சக்தியுமான ஸர்வ வல்லமை பெற்றிருப்பினும் இந்த மஹாவிஷ்ணுவானவர் மேலே சொன்ன ந்யாயப்படி ஸ்ருஷ்டி கார்யத்தை தனது ஜ்யேஷ்ட புத்திரனிடம் அதாவது ப்ரம்ம தேவனிடம் கொடுத்தான். இதுபோலவே ஸம்ஹார கார்யத்தை பரமசிவனிடம் கொடுத்தான். இன்னமும் பலப்பல அதிகாரங்கள் பலப்பல தேவர்களிடமும் கொடுக்க ஏற்பாடு செய்தான். இப்படியாக உலகப்படைப்பை ஆரம்பிக்கவும் அனுமதித்து ப்ரம்மனிடம் அவ்வதிகாரத்தை ஒப்படைத்தான். எதை அடிப்படையாக (ஆதாரமாக) வைத்து ச்ருஷ்டியை ஆரம்பிப்பது என்றறியாமல் ப்ரம்மதேவன் குழப்பமடையவே ''நான்கு வேதங்களை'' (அதாவது ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் மூச்சுக் காற்றுக்களான நான்கு வேதங்களை) முதலில் ப்ரம்ம தேவனின் கையில் கொடுத்து இதை மூல ஆதாரமாக வைத்துக் கொண்டு உலக ஸ்ருஷ்டியை] ஆரம்பிக்கக் கடவாய் எனக் கட்டளையிட்டான். இதற்கு ப்ரமாணமாக "யஸ்ய நிச்வஸிதம் வேதா: யோ வேதேப்யோ அகிலம் ஜகத்'' என்று சாஸ்திரம் கூறுகிறது.

அதன்படி முதற் சிருஷ்டியை ஆரம்பிக்கும் சமயம் ஒருக்ஷண காலம் ப்ரும்ம தேவனுடைய பொறுப்புணர்ச்சியை (அவதானத்தை) பரிசோதிக்க நினைத்த ஸ்ரீமந் நாராயணன் தனது யோக பலத்தால்-மது-கைடபா என்ற இரு ராக்ஷஸர்களை ச்ருஷ்டித்து அவர்களால் ப்ரும்ம தேவனிடமிருந்து வேதங்களை அபகரிக்கச் செய்தான். ப்ரம்ம தேவனும் வேதங்களை இழந்து, மனம் பரிதபித்து மீண்டும் ஸ்ரீமந் நாராயணனிடம் சரணடைந்து தன்னை மன்னித்து ரக்ஷித்தருளும்படி கேட்டான். அப்போதுதான் முதன்முதலாக ஸ்ரீமந் நாராயணன் தனது அவதாரத்தைத் துவக்கும் வகையில் மீனாக அவதாரம் எடுத்தார். ஜலத்துக்குள்ளே ஒளிந்து கொண்டிருக்கும் அவ்வசுரர்களை வதம் செய்து மீண்டும் வேதங்களை ப்ரம்மனுக்குக் கொடுத்தருளினார். இதுவே 'மத்ஸ்ய அவதாரம்'' எனப் பெரியோர்கள் கூறுகின்றனர்.

இப்படியாக வேத ஸம்ரக்ஷணார்த்தம் எடுத்த அவதாரமானபடியால் ஸ்ரீமந் நாராயணனுக்கு "வேத நாராயணன்'' என்று ஒரு திருநாமம் வழக்கில் உண்டாயிற்று. இத்திருநாமத்தையுடைய வேத புருஷனுக்கு ஓர் ஆலயம் கட்டி அதில் வேதமூர்த்தியான ஸ்ரீமந் நாராயணனை அர்ச்சாவதாரத்தில் எழுந்தருளப் பண்ணி நாமும் ஸேவித்து நம் மண்ணில் வாழும் மனித வர்கமே உஜ்ஜீவிக்க வேணும் என்கிற விசால நோக்கத்துடன் வேதங்கள் - சாஸ்திரங்கள் கற்றுத்தெளிந்த பெரியோர்கள் ஒன்று கலந்து ஒரு 'கோவில்' கட்ட நினைத்து செயல்படுத்தியும் விட்டனர். அதுவே தற்போது திருப்பதியிலிருந்து 65 கிலோமீட்டர் தூரத்தில் உள்ள நாகலாபுரம் எனும் சிற்றூரிலிருக்கும் ஸ்ரீவேதநாராயண சுவாமி திருக்கோயில். இந்த நாகலாபுரம் பற்றிய சிறப்புகளும் அங்குள்ள கோவில் மற்றும் பெருமாள் முதலிய விவரங்கள் பின் வருமாறு: திருப்பதியிலிருந்து சென்னை செல்லும் மார்கத்தில் இந்த ஊர் உள்ளது. நாகலா எனும் தனது மனைவியின் பெயரைக் கொண்டே இவ்வூரைச் சிறப்பித்தான் ஸ்ரீ. ஸ்ரீ. ஸ்ரீ. விஜயநகரப் பேரரசன் ஸ்ரீ கிருஷ்ண தேவராயன். இவ்வூரில் நான்கு அடி முதற்கொண்டே

ஊற்று ஜலம் வந்து விடுகிறது. தேச மொத்தம் மிகப்பெரிய பஞ்சம (அதாவது ஜலக்கஷ்டம்) வந்த போதிலும் இவ்வூரில் உள்ள கிணற்று ஊற்றுக்கள் வத்திப் போய் காய்ந்து விடாமல் இருப்பது இன்றளவும் சான்று. கோயில் ஐந்து ப்ராகாரங்கள் உடையது.

கோயிலின் விசேடச் சிறபபு ஏழு வாயில்கள் உள்ளன. 7 கோபுரங்கள உள்ளன. 14 த்வாரபாலகர்கள் உள்ளனர் அவைமுறையே: கர்பாலய த்வாரத்தில் இருவா மனிகர் சந்த்யாதேவி 2. முக மண்டபத்தில் இருவர், விகனஸர்–தாபஸர், 3. முதல் ப்ராகரத்தில் உள்ள கோபுரத்துவாரத்தில் ஷிஷ்கந்தர்–தீர்த்தர், 4. இரண்டாவது ப்ராகார கோபுரத்வாரத்தில் கனேஸர்–நாகராஜர், 5. மூன்ருவது ஆவரண வாயிலில் சங்க நிதியும் பத்ம நிதியும், 6. நாலாவது ஆவரண வாயிலில் துஹிணர்–பலிந்தா, 7. பஞ்சம ஆவரண வாயிலில் நந்தகா–சார்ங்கா ஆகியோராவர். ஆனல் சில துவாரபாலகர்களின் உருவங்கள் காலக்ரமத்தில் சிதிலமடைந்து தற்போது காணவில்லையாயினும் கோவிலின் சிறப்பு குறையவில்லை.

பெருமாள் பெயர்: வேத நாராயணப் பெருமாள். நின்ற திருக்கோலம். தாயார் பெயர் வேதவலலித் தாயார். விமானம் வேத விமானம், மேற்கு நோககின திருமுக மணடலம். புஷ்கரிணி வேத புஷ்கரிணி.

ப்ரத்யக்ஷம் மது–கைடபர் எனும் அரக்கர்களுக்கு பெருமாளின்சிறப்பு: தொப்புளுககுக் கீழே மீன் வடிவமாயும் தொப்புளுக்கு மேல் தெய்வ வடிவமாயும (பாதி மனுஷ்யாக்ருதி பாதி மீன ஆகிருதி) உள்ளூர் பெருமாளுக்கு நான்கு கைகள்; முறையே சங்கு சக்ரம் மற்றும் அபய ஹஸ்தம் வரதஹஸ்தம், மேலும் இங்குசம நோககில் சக்கரத்தை தரிக்காமல் ப்ரயோக அவஸ்தையாகவே சக்கரத்தை தன கையில் தரித்துக் கொணடிருக்கிருர். எனவே இவருக்கு "ப்ரயோக சக்ரதாரீ" எனும விசேடத் திருநாமம் ஏற்பட்டது. கீழே எழுதப்பட்ட சிறப்புகள் யாவற்றையும் காட்டிலும் முக்யமான சிறப்பம்சம ஒன்று பின்வருமாறு: பங்குனி மாசத்தை மீன மாஸம் என்று பெரியோர்கள் கூறுவர். அமமீன மாஸத்தின் திருவோண நக்ஷத்திரம் தினம் மிகவும் முக்யமான தினமாகக் கருதப்படுகிறது. ஏனெனில், பூராடம முதல் திருவோணம முடிய மூன்று தினங்கள் சாயங்கால சமயம் சூரியன் தனது அஸ்தமன சமயத்தில் ஏழாவது கோபுர வாயில் எனும் அழைக்கப்படும் ஸ்ரீ மஹாதவாரத்தின் வழியாக கோவிலின் உள்ளே தனது ஒளிக்கதிர்களை வீசி முறையே 6-5-4-3-2-1 என்று கர்ப்ப க்ருஹத்தில் நின்றிருக்கும் ஸ்ரீ வேத நாராயணப் பெருமாளுடைய பாதாரவிந்தங்களை அடைகிருன். அதாவது சூர்ய பகவான், தனக்கு தேஜஸ் எனும் ப்ரகாச சக்தியைக் கொடுத்து அநுக்ரஹித்த ஆதி மூர்த்தியான ஸ்ரீமந் நாராயணனை வைகுண்டத்தில் ஸேவித்தது போதாமல் இம்மண்ணுலகில் நித்ய வாசம் செய்யும் வேத நாராயணப் பெருமாளை த்யானிப்பதற்கும் ஸேவிப்பதற்கும் ஓடி வருகிருன். இப்படியாக பெருமாளின் கடாக்ஷத்தினுல்தான், க்ரஹங்களுக்கு அதிபதியாகி விளங்குகிருன். மேலும் சூர்ய மணடல அந்தர்வர்த்தியாக பகவான் ஸ்ரீமந்நாராயணன் ப்ரகாசித்து வருகிறபடியால் சூர்யனுக்கு சூர்யநாராயணன எனும் பெயா வழக்கில் ஏற்பட்டது. பெருமாள நித்யவாஸம் செய்யுமிடம் மூன்று இடங்கள். 1. வைகுண்ட லோகம் 2. க்ஷீராப்தி 3. சூர்ய மண்டலம் என்று வேதங்கள் பறை சாற்றுகின்றன. இநதக் கோவில் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் நிருவாகத்தின கீழே வந்து சுமார் 16 வருடங்களுக்கும் மேலாகின்றது. திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் சிறநத நிர்வாகத்தினுல் இக்கோவில் தூயமை யாகவும துப்புரவாகவும் உள்ளது. வழக்கம் போல் இவ்வருடம் "சூர்ய பூஜை" சென்ற மாரச்மாதம் 25, 26, 27 தேதிகளில் சிறப்பாக நடைபெற்றது. இந்த 3 தினங்களிலும் வேத புஷ்கரிணியில் வேதவல்லிசமேதவேத நாராயணப் பெருமாளுக்கு தெப்ப உத்ஸவம் நடைபெறுகிறது. திரளான மக்கள் தரிசித்து தெளிந்து செல கிருர்கள். பாரத தேசத்திலேயே மத்ஸ்ய அவதாரத்திற்கு என மேற்கு நோக்கின கோவில் ஒன்று உள்ளது என்று சொன்னுல் அது நாகலாபுரத்தில் தவிர வேறு எங்கும் இல்லை என்று அறுதியிட்டுக் கூறலாம். பரதக் கலை அதிகம் உள்ள இக்கோயிலையும் இக்கோவிலில் எழுந்தருளியுள்ள வேத மூர்த்தியையும் நாம் தரிசித்தல் மிக மிக நலம் பயக்கும். ★

# ★ பாகவதம் காட்டும் காலச் சக்கரம் ★

பாகவதம் என்பது கிருஷ்ண பகவானைக் குறித்து பேசும் பக்தி நூலாகும். இது பத்து விஷயங்களை விவரிக்கின்றது. கிருஷ்ண பகவானுடைய சரித்திரத்தை 'பாகவத புராணம்' என்ற பெயரில் வியாசர் அருளினார். உலகத்தினுடைய நன்மையைக் கருதி இதனை தன் புதல்வரான "சுகருக்கு" உபதேசித்தார். சுகமகரிஷி ஒரு நாள் கஙகைக் கரையில் "பிராயோப வேசம்" (உண்ணாமல் ஓர் இடத்தில் அமர்ந்திருப்பது) செய்து படுத்திருந்த பரீட்சித்து மன்னருக்கு வேத, இதிகாச சாரமாக விளங்கும் பாகவதம் காட்டுகின்ற காலச் சக்கர விநோதத்தை தன் திருவாய் மலர்ந்தருளினார்.

காலம் என்பது சிருஷ்டியுடன் நெருங்கிய தொடர்புடையது; என்பதைத் தெரிந்து கொண்டால் தான், சிருஷ்டியைப் பற்றித் தெரிந்து கொள்ள முடியும்.

காலம் என்பது ஆரம்பமும் முடிவும் இல்லாதது. இறைவனான ஸ்ரீமந் நாராயணன் பிரபஞ்சத்தை உண்டாக்கியும், காத்தும் அதனை ஒடுக்கியும் கொள்கிறேன் என்று ஒடுக்கியும் அருளுகின்றார். காலம் என்பதை இறைவனுக்கு ஒப்பாகச் சொல்லலாம். காலத்திற்கு உட்பட்டே சிருஷ்டி முதலான காரியங்கள் நிகழ்கின்றன

**சிருஷ்டி ரகசியம்:**

1. சத்துவம், ராஜஸம, தாமஸம் ஆகிய மூன்று குணத்தால் சிருஷ்டி ஆரம்பமாகிறது.

2. அகங்காரத்தால்—பஞ்ச பூதங்கள், ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள் உண்டாகின்றன.

3. சூட்சுமத்தால்—தன் மாத்திரைக்குப் பஞ்ச பூதங்களை உண்டாக்கும் ஆற்றல் உண்டாகின்றன.

4. இந்திரியங்களின் சிருஷ்டி.

5. இந்திரியங்களுக்கு அதிபதியான தேவதைகளின் சிருஷ்டி

6. அவித்தையின் சிருஷ்டி, (பிராக்கிருத சிருஷ்டி என்பர் சிலர்.)

7. பிராக்கிருதத்திலிருந்து "வைகிருத" சிருஷ்டியான "தாவர சிருஷ்டி" ஆறு விதமாக நமக்குத் தெரிய வருகிறது.

8. பறவை, விலங்கு முதலானவை சிருஷ்டித்தல்.

9. மனித சிருஷ்டி

10. தேவ சிருஷ்டி

**காலம்:**

காலமே வடிவாக இருப்பதனால் ஸ்ரீமந் நாராயணனை வேதங்கள கூறுகையில் "கால கால சொரூபன்" என்கிறது.

பிரபஞ்சத்தில் எது மிகச் சிறியதோ, பகுக்க முடியாதோ, மற்றதில் சேராமல் தனியாக இருக்கிறதோ அதைப் பரமாணு என்பர். இதனை (அணுவின் அல்லது பரமாணுவின்) சூரியனுக்கு கடக்க எவ்வளவு நேரம் பிடிக்குமோ இதனை பரமாணுக் காலம் என்பர்.

இந்தப் பரமாணுக்களின் இடையில் நிலவும் காலத்தின் அளவை பல நிலைகளில் பிரித்துக் கணக்கிடுகின்றனர் இரண்டு பரமாணுக்கள் சேர்நதால் அணுவென்றும், அணுக்கள் மூன்று சேர்ந்தால் திரிஸ்ரேணு என்றும், மூன்று திரிஸ்ரேணுககள் சேர்ந்தால் "திருடி" எனறும கூறினார். 'திருடி' என்ற பொருளைக்கடக்க சூரியனுக்கு எவ்வளவு நேரம பிடிக்கிறதோ அந்தக் கால அளவையும் திருடி என்பர்.

நூறு திருடிகள் சேர்ந்தது ஒரு வேதம்.

மூன்று வேதங்கள் சேர்ந்தது ஒரு லவம்.

திரு. S. நாராயணசுவாமி, M A.B.Ed,
இன்னமபூர்

மூன்று லவங்கள் சேர்ந்தது ஒரு நிமிஷம்.

மூனறு நிமிஷங்கள் சேர்ந்தது ஒரு கணம்.

ஐந்து கணங்கள் சேர்ந்தது ஒரு காஷ்டை.

பதினைந்து காஷ்டைகள் சேர்நதது ஒரு லகு.

பதினைந்து லகுக்கள் சேர்ந்தது ஒரு நாழிகை

இரண்டு நாழிகை சேர்ந்தது ஒரு முகூர்த்தம்.

**காலத்தின் சேர்க்கை:**

எட்டு யாமங்கள் கொண்டது மனிதர்களுக்கு இரவு பகலைக கொண்ட ஒரு நாளாகும்.

பதினைந்து நாட்கள் சேர்ந்தது ஒரு பட்சம் இது சுக்கில பட்சம், கிருஷ்ண பட்சம். (வளர் பிறை, தேய் பிறை) என இரு வகைப்படும். இரண்டு பட்சங்கள் சேர்நதது ஒரு மாதம், இரணடு மாதங்கள் சேர்ந்தது ஒரு ருது, மூன்று ருதுக்கள் ஒரு அயனம், பன்னிரெண்டு அயனம் ஒரு வருடம் ஆகும். நூறு வருடங்கள் மனிதனுக்குப் பூரண ஆயுள் என்கிறது.

**காலத்தின் விரிவு:**

எம்பெருமானின் சிருஷ்டியில் (கர்ம சக்தி) மனிதர்களுக்கு நூறு வருடங்கள் தேவர்களுக்கு ஒரு நாள். உத்தராயண காலம் தேவர்களுக்கு பகலும், தட்சிணாயன காலம் தேவர்களுக்கு இரவும் ஆகும். மனிதர்களுக்கு நூறு வருடங்கள் பூர்ண ஆயுள் ஆகும். தேவ வருடங்களைத் தேவமானம் என்றும் சொல்லுவார்கள்.

1. கிருதாயுகம் என்பது, பதினாறு யிரத்து எண்ணூறு தேவ வருடங்களைக் கொண்டது.

2. திரேதாயுகம் பதினையாயிரத்து அறு நூறு தேவ வருடம்.

3. துவாபரயுகம் பதினாலாயிரத்து நானூறு தேவ வருடம்;

# மன்னித்தருள் புரிகவே!

திரு. ப. பாலசுப்ரமணியன், திருப்பத்தூர்.

நவமைதரு நூலெதுவும் நானுகப் படித்ததிலே
நல்லவரைச் சேர்ந்த திலேயே!
பொன்னதனைத் தவிரவொரு பொருளதனை வாழ்வதனில்
தேடிநிதம் அலேந்த திலேயே!
மின்னலென வீசிவரும் எண்ணமதில் இறையுனேயே
எந்நாளும் நினைத்த திலேயே!
மண்குன்ற மலேவாழும் மாதவனே! தூயவனே!
மன்னித் தருள்பு ரிகவே!

பாசமுடன் பழகியவர் நேசமதை மறந்துநிதம்
ஆசையால் அலேந்த ழிந்தேன்!
காசதனில் மனங்கொணடு கூசாமல் கயவர்முன்
கைகட்டி வாய்பு தைத்தேன்!
ஏசிடினும் போற்றிடினும் ஏதொன்றும் எண்ணுமல்
ஏவலே புரிநது வந்தேன்!
வாசமுடன் மண்குன்றில் வாழ்பவனே! வேங்கடவ!
மன்னித் தருள்பு ரிகவே!

அஞ்சாமல் பொய்கூறும் போட்டியினில் எனேவெல்ல
எவருமிலே என்னும் வண்ணம்
அஞ்சாறு பொய்கூட அரைநொடியில் அளவின்றி
அள்ளித் தெளித்து நின்றேன்!
பஞ்சாகும் இவ்வாழ்வு என்றெண்ணிப் புணணியமே
செய்யாத பால னிவனே
மஞுசுதவழ் மண்குன்றில் மருந்தாக வாழ்பவனே!
மன்னித் தருள் புரிகவே!

விழியதனே மின்னலிடை மாதர்தமை அன்றியொரு
பொருளிடை செலுத்தி அறியேன்!
கழியதனேக கையேந்தி நடைபயிலும் வேளேயிலும்
கண்ணனடி நினேந்து அறியேன்;
பழிபாவம் அஞ்சாது பணபுள்ள மானுடரை
வஞ்சித்தேன் வேறு அறியேன்:
அழகொழுக மண்குன்ற மலேமீது வாழ்பவனே!
மன்னித்தருள்பு ரிகவே!

வேதத்தின் உணமைதனே நாதத்தின் தன்மையினே
கடுகளவும் அறிந்தி டாதே
மாதமெலாம் வாழும்வழி தனேத்தேடி பொருள்நாடி
பேயாய் அலேந்து நொந்தேன்!
சாதல்தான் இனிவழியே என்றறிலே வந்தவுடன்
தேவனுனேத் தேடி வந்தேன்;
வேதத்தின் நாயகனே! மண்குன்றில் வளர்பவனே!
மன்னித் தருள்பு ரிகவே!

அழியாத செல்வம்நீ அருளாளன் என்றும்நீ
என்றுன்னே அறியா மல்நான்
ஒழியாமல் ஓயாமல் பழிபாவ மஞ்சாமல்
பலவினே புரிந்து நின்றேன்;
விழிதன்னே உன்மீது வைக்காத பாலனிவன்
வீணனெனத் தள்ளி டாதே
பழியெலாம் போக்கியருள்! மண்குன்ற மலேவாச!
மன்னித் தருள்பு ரிகவே!

4. கலியுகம் பதின்மூவாயிரத்து இரு நூறு தேவ வருடம்.

மன்வந்தரத்தில் தோன்றும் மனுவும் அந்த மனுவின் வம்சத்தினராகத் தோன்று ரிஷிகளும், அரசர்களும் தேவர்களும், கந்தர்வர்களும் அந் தந்த மன்வந்தர காலமட்டும் மூன்று உலகங்களேயும் பாதுகாக்கிறுர்கள்.

மானிடர்களுக்கு வயது நூறு என்று காலவரையறை இருப்பதைப் போன்று பிரபஞ்சத்தைப் படைக்கும் பிரம்ம தேவனுக்கு ஆயுள் நூறு சதுர் யுகங்கள் ஆகும்.

பிரம்மாவின் ஆயுளில் முந் பாதியை பூர்வ பரார்த்தம் என்றும், பிற்பாதியை உத்தர பரார்த்தம் என்றும இரு பிரிவுகளாகக் கூறுவர்.

முதல் பரார்த்தின் கடைசிப் பகுதியில் ஒரு கல்பம உண்டாயிற்று. அதற்குப் பாத்ம கல்பம் என்று பெயர். இந்தக் கல்பத்தில் அநிருத்த பகவானின் நாபியிலிருந்து தாமரைப் பூப்போல இந்தப் பிரபஞ்சம் உண் டான காரணத்தால் இந்தக் கல்பத் துக்குப் பாத்ம கல்பம் என்று பெயர்.

இவ்வாறுக சுக மகரிஷி ஈஸ்வர னின் சிருஷ்டியில் ஏற்பட்ட காலச் சக்கர விசேஷத்தையும், மாறுதலி ஞல் ஏற்படும் நன்மை தீமைகளேயும் தெரிந்து கொள்ள நம் மனதினே அடக்கி ஒருமித்த நோக்குடன் நீ (பரிட்சித்து மகாராஜா) ஞானேந் திரிய கர்மேந்திரியங்களே உன் வசப் படுத்தி எங்கும் நீக்கமற இருந்து வருகிறவனும் எண் குணத்தையும் உடையவனும் மூன்று தொழிலுக்கும் அதிபதியாயிருப்பவனும், ஆயிரம் தலே உள்ள ஆதிசேஷன் தேகத்தில் அமர்ந்து நமக்கெல்லாம் இருந்த இடத்தில் அருளுகின்ற ஸ்ரீமந் நாரா யணின் கடாக்ஷம் சித்திக்கப் பெற் ருல் உயர்வு தாழ்வு, பாவ புண்ணி யம், உயிர்களின் பேதங்கள், நரகம் சொர்க்கம் என இவைகளுக்கு அப் பாற்பட்டு என்றென்றும நித்ய சிரஞ் சீவியாய் அவன் அருகில் நின்றே இன்பம் துய்ப்போம் என, தன் உப தேசத்தால் பரிட்சித்துக்கு உணர்த் திஞர். இவ்விதமாக காலச் சக்கரம் நம்மவர் கண்களுக்குத் தெரிந்தும், கண்களுக்கு அப்பாற்பட்டும் இருப் பதை அவன் திருவடி பணிந்து தெரிந்து அனுபவிப்போமாக.

# ஸ்ரீ தீர்த்த நாராயணர் சரித்திரம்

ஆந்திரப்பிரதேசம குணடூர் ஜில்லா மங்களகிரிக்கு அருகில் உள்ள காஜா என்னுமிடத்தில் ஸ்ரீநாராயணர் தில்லவத்ஸல எனும உத்தம பிராமணகுலத்தில் பிறந்தவா. மஹா தேவசாஸ்திரியார் எனும் மஹானிடம் பன்னிரு வருடஙகள் கல்வி பயின்றார். அத்வைதத்தில் சிறந்து விளங்கினார். பிரம்மசர்யத்திலேயே துறவறம் ஏற்று சுக பிரம்மம் எழுதிய ஸ்ரீமத் பாகவதத்தில் மனம தோய்ந்து அதையே பாராயணம் செய்தபடி விளங்கினார். பிரம்ம நிஷ்டராக விளங்கி உறைவிடம் எதுவுமின்றி வடநாடெங்கும் சுற்றியலைந்தார். வேதாத்ரி எனும் திருத தலத்தில் பன்னிரெண்டு ஆண்டுகாலம் தவம் புரிந்தார். பின்பு காசிககுச் சென்று அங்கு தபஸ்வியான ராமானந்த தீர்த்தர் எனும் மஹனீயரின் சிஷ்யரானார். ஸ்ரீ தீர்த்தநாராயணா என்ற தீக்ஷாநாமமும் பெற்றார்.

காசியில் தம் குருநாதருக்குப்பணிவிடை செய்து அவர் முக்தியடைநதவுடன் தெனனாட்டில பல தலங்கட்கும விஜயம் செய்தார். திருவிடைமருதூர் திருவையாறு போன்ற பல இடங்களில் தங்கி நடுககாவேரி என்னும் கிராமம் வந்தடைந்தார். அவ்வூர் பிள்ளையார் கோயிலில் அன்றிரவு தங்கி யோகத்தில் ஆழ்ந்தார்.

அன்றிரவு அவர் கனவில் சங்கு, சக்கரம் ஏந்திய கையராய் மஹாவிஷ்ணு தோன்றி தான் எடுதத தசாவதாரங்களின் தோற்றஙகளையும் காட்டி, அலர்மேல் மங்கை ஸமேதரான ஸ்ரீநிவாஸப பெருமானாகவும் காட்சி தந்தார். 'நாளைக்காலை உன் எதிரில் தோன்றிடும வராஹத்தைப் பின் தொடர்ந்து அது காட்டும் இடத்தை அடைவாய்' என்றும கூறி மறைந்தாா.

மறுநாள் உதயத்தில் பகவான் கனவில் அருளியபடி பன்றி உருவமாய் வராஹப் பெருமான் தீர்த்த நாராயணர் எதிரில் தோன்றினார். அவ்வராகத்தைப் பின் தொடர்ந்து தீர்த்த நாராயணர் கொஞ்ச தூரம் மேற்கே சென்றார் அது வரகூர் என்னும் கிராமத்தில் அந்தணர் வீதியின் நடுவில் புகுந்து ஒரு வீட்டினுள் சென்று மறைந்தது.

உலகத்தை வயிற்றில் வைத்துக் காப்பாற்றுபவரும், பக்தர்களின் துயரம் நீக்கவே பத்து அவதாரம் எடுத்தவருமான பகவான் நாராயணனே தம்மை உய்விக்கும் பொருட்டு வராஹமாகத் தோன்றினார் என்பதை உணர்நத தீர்த்த நாராயணர் கண்ணீர் மல்க கசிந்துருகி இறைவனைத் துதித்து ஏழு நாட்கள் நிஷ்டையிலிருந்து அங்கு ஸ்ரீ வேங்கடாசல மூர்த்தியை ஸ்தாபித்தார். தாமே அங்கு தங்கி எம்பெருமானுக்குக் காலம் தவறாது பூஜைகளை நடத்தியும், புரட்டாசி மாத சனி வாரங்களில் உறசவாதிகளைச் செய்தும், கோகுலாஷ்டமி போன்ற விழாக்களைத் திறம்பட நடத்தியும வந்தார். அவ்வூர் மக்கள் பலரும் இவரது பெருமையை உணர்ந்து இவருக்குச் சீடராயினர்.

சிலநாள் சென்ற பின்பு பகவான் கிருஷ்ணர் இவர் கனவில தோன்றி தம்முடைய திவ்விய லீலைகளை இவர் தம் வாக்கினால் பாடவேண்டுமென்று ஆக்ஞாபித்தார். மறுநாள் பகவானைத் துதித்து பாகவத ஓலைச் சுவடிகளைப் பிரித்தார். உடனே மங்களாலயா என்ற பதம் ஒரு ஏட்டிலும், மங்களம் ருக்மிணி எனற பதம மற்றொரு ஏட்டிலும் இருக்கக் கண்டாா. இந்த ஆதாரத்தைக்கொணடு தேவகி வசுதேவர் விவாஹம் முதல் ருகமிணி கல்யாணம் வரையில் எழுதி முடித்து அந்நூலுக்கு கிருஷ்ண லீலா தரங்கிணி எனற பெயரைச் சூட்டினார். இந்த நூலில் ருக்மிணி கல்யாண வைபவப் பாடலை ஸ்ரீ தீர்த்த நாராயணர் பாடுங்கால் ஸ்ரீவேங்கடேசப் பெருமான் ருக்மிணி சமேதராக ஸ்ரீ கோபாலகிருஷ்ண ரூபமாக தரிசனமளித்து அருளினார். இந்த அதிசயத்தை அங்குக் கூடியிருந்த மெய்யனபர்கள் அனைவருமே கணடு களித்தனர்.

பின்னர் ஸ்ரீதீர்த்த நாராயண ஸ்வாமிகள் தாமியற்றிய கிருஷ்ண லீலாதரங்கிணி பாடல்கள் முழுவதும் பகவானால் ஒப்புக்கொள்ளப்பட்டனவா என்று ஐயுற்று சோதிக்க எண்ணி தாம் பூஜித்து வந்த ஸ்ரீனிவாஸ விக்ரஹத்தைச் சுற்றிலும் பட்டுத் திரையால் மூடித் தாம் வெளிப்புறம் நின்று பல பாடல்களைப் பாடினார். திரையினுள் பகவான் நர்த்தனம் செய்யும் சதங்கை ஒலி எழுந்தது. இவ்விதம் ஆண்டவன் ஆமோதித்ததைக்கண்டு தீர்த்த நாராயணர் பக்திப் பரவசமெய்தினார்.

திரு. பி. சுந்தரராஜன் எம் ஏ பி.எட
பழமார்னேரி

சிலகாலம் சென்றபின் தம் வாழ்நாள் முடியப் போவதை உய்த்துணர்ந்தார். பூபதி ராஜபுரம் என்னும் வரகூரில் சைத்ரிகர்களைக் கொண்டு தம் உருவத்தை வரையச் செய்து பத்திரப் படுத்தினார். பின்பு கிழக்காக சில மைல் தொலைவில் உள்ள திருப்பூந்துருத்தி அடைந்து அங்குள்ள ஆலயத்தில ஜீவன் முக்தரானார்.

ஸ்ரீ தீர்த்த நாராயணரின் இசைத்தொண்டு அளவிடற்பாலது. ஜயதேவரின் அஷ்டபதிகட்கு ஒப்பாக இவரது கிருஷ்ண லீலா தரங்கிணி கொண்டாடப்படுகிறது. சுலோகம், சூர்ணிகை, வசனம், கீர்த்தனை ரூபமாக இது சிறநது காணப்படுகிறது. அபிநயத்திற்கும் நாட்டியத்திற்கும் இவை மிகவும ஏற்றவையாகக கருதப்படுகின்றன. திருப்பூந்துருத்தியில் இன்றும் இவரது மடம் காணப்படுகிறது. ஆண்டுதோறும் இவரது ஆராதனை மிகச் சிறந்த இசைவாணர்களால் கொண்டாடப்படுகிறது.

★

# திருவேங்கடமலை வரலாற்று மாலை

8

இனி ஸ்ரீவேங்கடாசல மாகாத்மியத்தை ஆராய்ச்சி செய்வதன் வாயிலாக இராமானுச முனிவர் அத்திருமலைக்கே ஏற்பட்ட சில தருமங்களை அனுஷ்டிக்கத் தக்கவையாக நியமித்தருளிய சரிதம் கூறப்படும்.

## திருவேங்கடமலையின் வைபவச் சிறப்பு

பகவத் ராமானுஜ முனிவர் திருவேங்கட மலையின் மான்மியங் கூறும் புராணப் பகுதியை முழுதும் நன்றாக ஆராய்ச்சி செய்யலானார்.

'திருவேங்கடமென்னும் பெயர் பெற்ற விஷ்ணுவின் விளையாட்டுமலை வைகுந்தலோகத்திலிருந்து கொண்டு வந்து பெருமாள் வசிப்பதற்காக ஸுவர்ணமுகி நதியின் சமீபத்தில் கருடனால் வைக்கப்பட்டது' என்று மார்க்கண்டேய புராணம் இரண்டாமத்தியாயத்திலுள்ள வசனத்தினாலும், 'திருவின் மணவாளனாகிய பூவராகப்பெருமாள் உலகோர்க்கு அருள் செய்ய ஆசை கொண்டு பூமியில் தாம் வசிக்கத்தக்க நல்ல இடமொன்றை ஆராய்ந்து அறுதியிட்டு மகா பலசாலியான கருடனை நீ மிகவும் வேகமாகப் பரமபதம் சென்று விளையாட்டுமலையை இங்கே கொண்டு வா என்று கூறிக் கருடனை அனுப்பினார்' என்றும், 'கருடனும் பரமபதம் சென்று திவ்வியமாய அளவிடற்கரிய பெருமை படைத்ததாய் மிகப்பெரிய கொடுமுடிகளைக் கொண்டதாய் பஞ்சோபநிஷத்ஸ்வருபமான (பரமபதத்திய பஞ்ச பூதங்களாலான) மலையைக் கண்டான்' என்றும், 'அங்ஙனம் கண்ட பொனனிறமுள்ள கருடன் நாராயணகிரியென்று பெயர் பெற்றதும் ஸ்ரீவைகுண்டநாதன் விளையாடும் மலையானதும் மூன்று யோஜனை அகலமும் முப்பது யோஜனை நீளமும் கொணடதும் (ஒரு யோஜனையாவது-எட்டு மைல் என்பர்) ஆதிசேஷனது உருவமுடையதும் ஹரியை மகிழ்விக்குமிடமாகையால் எல்லோராலும் வணங்கத்தக்கதும் மிகவழகிய வடிவமுடையதும் மிகப் புனிதமானதும் காண்போர்க்கு மோக்ஷமளிக்க வல்லதும பகவானுக்கு அடிமை செய்யும் பரிவாரங்களோடு கூடியதுமான இத்தகைய மலையைத் தனது தோளில் வைத்துக் கொண்டு கடுவேகமாகத் திரும்பி வந்தான்' என்றும் உள்ள வராக புராண முதற்பகுதியில் 34 எண்ணிட்ட இரணடாமத்தியாய வசனங்களினாலும், அதிலேயே 36 எண் குறித்த நான்காமத்தியாயத்தில் "வைகுண்டத்திலிருந்து வந்ததனால் வைகுணடாத்ரி என்று கருதப்பட்டது (இம்மலை)' என்ற வசனத்தினாலும ஸ்ரீவைகுண்டத்திலிருக்கும் பஞ்சோபநிஷத்ஸ்வருபமாய திவயமான பகவானுடைய விளையாட்டுக்குரிய மலையாக மிகவும் பிரசித்தி பெற்றுள்ளது இத்திருமலை.

அதே அத்தியாயத்தில் 'இம்மலை ஒரு சமயத்தில் ஸ்வர்க்கவாஸிகளான தேவர்களுக்கு ஸ்ரீநிவாஸன் போல் காட்சியளித்தது. ஆகையால் அவர்கள் இதனை ஸ்ரீநிவாஸகிரியென்று சிறப்பித்துச் சொல்லுகிறார்கள்' என்றுள்ள வசனத்தினால் திருமாலின் அழகிய திருமேனியாகவும் தேவர்களுக்குத் தோன்றியதாகப் பிரசித்தி பெற்றிருக்கிறது இத்திருமலை.

பிரம்மாண்ட புராணம் இரண்டாமத்தியாயத்தில், 'மகிழ்ச்சியினால் மலர்ந்த திருக்கண்களையுடைய பகவான் தன் முன்னே நிற்கும ஆதிசேஷனையழைத்து மேகம் முழங்குவது போன்ற கம்பீரமான குரலுடன் குற்றமற்ற அனந்தனே எனக்குப் பிரியமானவன் இவ்வுலகில் உன்னைத் தவிர வேறொருவனுமில்லை. ஆகையால் எனக்குப் பிரியமானதோர் காரியத்தை நீ செய்ய வேண்டும். நாரதமுனிவர் கூறியவற்றையெல்லாம் நீ கேட்டாயல்லவா? விளையாடுவதற்குத் தக்கதோரிடத்தில் வசிக்க வேண்டுமென்பது எனது எண்ணம். பூலோகத்தில் நீ உயர்ந்ததொரு மலையுருவங்கொணடு இருக்கக்கடவாய். உனது படத்தொகுதியின் கீழுள்ள இடத்தில் திருமகளோடு கூடி நான் வசிக்கிறேன் என்று கூற, அதற்கு ஆதிசேஷன், தேவர் பெருமானே அனந்தனாகிய அடியேன் மலையுருவம் தரித்து நிற்கிறேன். அதன் தாழ்வரைகளில் தேவரீர் திருமகளுடன் கூடிக் களித்திருப்பீராக' என்று கூறியதாக உள்ள வசனத்தினால் ஆதிசேஷருபமாக அறியப்படுகின்றது இத்திருமலை.

அவ்வத்தியாயத்தின் முடிவிலேயே 'அகஸ்தியர் முதலிய முனிவர்கள்,

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான், திருப்பதி.

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

தாங்கள் செய்யும் தவம் பலிக்க வேண்டுமென்ற ஆசையுடன் அம்மலையில் பெருகுகின்ற அருவிகளில் நீராடி நீண்ட காலம் தவம் புரிந்தனர். அம்மலை திருமாலின் மற்றொரு திருமேனியாகையால் அவர்கள் அதனைக் காலால் மிதிக்கவில்லை. நாராயணனுடைய அம்சமாக உதித்த ஆதிசேஷனாகிய அரவரசன் மலைவடிவம் தாங்கியுள்ளான்' என்றுள்ளதனால் ஆதிசேஷனது திருமேனியாகவும் பகவானது திருமேனியாகவும் அறியப்படுகிறது இத்திருமலை.

வாமன புராணம் 21 எண்ணிட்ட இரண்டாமத்தியாயத்தில் 'சுகர் முதலிய சில முனிவர்களும் பிருகு முதலான தவச் செல்வரும பிரகலாதன் தொடக்கமான புண்ணிய புருஷர்களும் அம்பரீஷாதி ராஜாக்களும் உயர்ந்த அம்மலையினை விஷ்ணுவின் வேறொரு திருமேனியென்றே நினைத்து அதனைக் காலால் மிதிக்கக் கூசி அதன் பக்கங்களிலேயே இருந்து அம்மலையிலிருந்து புறப்படும் நதிகளிலேயே ஸ்நானம் தர்ப்பணம் இவைகளைச் செய்துகொண்டு ஜநார்த்தனனாகிய திருமாலை நேராகக் காண விரும்பித் தவமியற்றுகின்றனர்' என்றுள்ள வசனங்களினாலும், தத்துவமறிந்தவர்களில் தலைவர்களான சுகாதி பரமரிஷிகள் பிரகலாதாதி பரமபாகவதர்கள் அம்பரீஷாதி ராஜரிஷிகள் முதலியோர்களால் ஸ்ரீவிஷ்ணுவின் திருமேனியென்ற எண்ணங்கொண்டு தம்முடைய பூதவுடலாலும பாதத்தாலும் தொடக் கூசி அடிவாரத்திலேயே வசித்துப் பரமனைக் கண்கூடாகக் காணபதற்காகத் தவம் செயது கொண்டிருந்தமை வாயிலாக ஸ்ரீமந் நாராயணனுடைய திவ்யதிருமேனியென்று கருதப்பட்டதாக அறியப்படுகிறது இத்திருமலை.

அறியாமை அறவே அகன்ற ஆழ்வார்களும் தமது பௌதிக தேகத்தாலும் பாதத்தாலும் திருவேங்கடமலையைத் தொடலாகாதென்று கருதி அடிவாரத்திலேயே இருந்து பெருமாளுக்குப் பல்லாண்டு பாடினதாகக் கூறப்படுகிறது.

திருவேங்கடமலை மேருமலையின் மகனென்றும் ஆதிசேஷனுக்கும் வாயு தேவனுக்கும் நேர்ந்த ஸம்வாதம் (சொற்போர்) காரணமாக அசைத்துத் தள்ளப்பட்டதென்றும் உள்ள பேச்சு மற்றொரு கற்பத்தைப் பற்றியது. அப்படியிருந்தாலும் இராமபிரான் கண்ணபிரான் முதலியோர்க்கு, தசரதன் வசுதேவன் முதலியவர்களின் பிள்ளையாயிருத்தலோடு தமக்கென்றே ஏற்பட்ட திவ்யவுருவம் பெற்ற பகவானுடைய அவதாரமாயிருத்தலும் பொருந்துமாப் போலே, மேருமலைக்குப் பிள்ளையாகுந் தன்மை பெற்ற இத்திருமலைக்கு ஸ்ரீவைகுண்டத்திலுள்ள விளையாட்டு மலையின் அவதாரமாகுந் தன்மையும் ஆதிசேஷனும் பகவானும் ஆவேசித்துள்ளமை காரணமாக அவர்களின் திருமேனியாகுந்தன்மையும் பொருந்துவதில் தடையேதுமில்லை. கருடனால் வைகுண்டத்திலிருந்து நேராகக் கொண்டுவரப்படுதலும் மேருவின் மகனாக அவதரித்து ஆதிசேஷ வாயு தேவ ஸம்வாதத்தினால் கொணரப்படுதலும் ஆகிய இவ்வளவேயான மாறுபாடு வெவ்வேறு கற்பங்கள் காரணமாக உண்டாயிற்று. அதனால்தான் 'எல்லாவுலகோராலும் வணங்கப்பட்ட வேங்கடாத்ரியென்று பிரசித்தமான மலை-எல்லாத் தேவர்களாலும் வணங்கப்பட்டு மிகப்புனிதமான மேருமலையின் மகனாகும்' என்றும, 'வேகமுள்ள கருடனால் வைகுண்டலோகத்திலிருந்து கொண்டு வரப்பட்ட விஷ்ணுவின் பெரிய விளையாட்டு மலையானது தேவர் முனிவர் கணங்களால் பூஜிக்கப்பட்டு ஸ்வர்ணமுகி நதியின் புனிதமான கரையில் இருக்கிறது' என்றும், வேங்கடமலைக்கு வெவ்வேறு கற்பங்களில் ஏற்பட்ட மேருவின் புத்திரத்தன்மை கருடனால் கொணரப்பட்ட வைகுண்டலோக விளையாட்டுமலைத் தன்மை ஆகிய இரண்டும் ஒரே மலையில் உள்ளனவாகக் கூறும—ஸ்காந்த புராணம் முப்பத்தேழாமத்தியாயத்திலுள்ள இரண்டு வசனங்களும பொருந்துகின்றன.

இங்ஙனமே ஸ்ரீவைகுண்டத்திலுள்ள விளையாட்டு வாவியான ஸ்வாமி புஷ்கரிணிக்கு ஸரஸ்வதியின் அவதாரத் தன்மையும் முரண்பாடின்றிப் பொருந்தும். ஒரு கற்பத்தில் செயற்கரிய தவம் செய்த ஸரஸ்வதிக்கு அக்காலத்திலேற்பட்ட விருப்பம் நிறைவேறுவதற்காக ஸ்வாமி புஷ்கரிணியில் புகுவதை மட்டும் பெருமான் இசைந்ததைக் கொண்டு ஸ்வாமி புஷ்கரிணீ ஸரஸ்வதியின் அவதாரமென்று சொல்லத் தடையில்லையன்றோ?

மேருமலைக்கு மகனாகப் பெற்றமை மட்டுமே கொண்டு வேங்கடமலைக்காவது, ஸரஸ்வதி புகுரப்பெற்றமை மாத்திரமே கொண்டு ஸ்வாமி புஷ்கரிணிக்காவது ப்ராக்ருதத்வம் (இவ்வுலகத்திய பஞ்ச பூதங்களினால் உண்டாக்கப்பட்டதென்னும் தாழ்வு) சிறிதும் சந்தேஹிக்க இடமில்லை அங்ஙனம் ப்ராக்ருதத்வத்தை இசைந்தால் அவ்விரண்டிற்கும் எல்லாப் புராணங்களிலும் எல்லாவிடங்களிலும்—இவ்வுலகத்திற்கு அப்பாற்பட்டதாய் மிகப் பரிசுத்தமாய்ப் பரமபதத்திய பஞ்சபூதமயமாய்ப் பகவானுக்கு மிகப் பிரியமான பொருளாந்தன்மை கோஷிக்கப்பட்டிருப்பது பொருந்தாமற் போய்விடுமன்றோ?

## தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயில், திருச்சானூர்
## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | |
|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை—சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனைரூ.6-50 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | | | —நித்ய அர்ச்சனை (வருடத்திற்கு ரூ. 150/- செலுத்தும் கிருஹஸ்தர்கள் பங்கேற்கலாம்) |
| 6-15 | ,, | 6-45 | ,, —சுத்தி—முதல்மணி |
| 6-45 | ,, | 1-00 மதியம் | —ஸர்வதரிசனம் |
| 1-00 | ,, | 1-30 | ,, —சுத்தி, 2-வது மணி |
| 1-30 | ,, | 7-00 இரவு | —ஸர்வதரிசனம் |
| 7-00 | ,, | 7-30 | ,, —சுத்தி, இரவு மணி |
| 7-30 | ,, | 8-30 | ,, —ஸர்வதரிசனம் |
| 8-30 | ,, | 9-00 | ,, —ஏகாந்தசேவை |

### வெள்ளிக்கிழமைகளில்

காலை

| | | | |
|---|---|---|---|
| 4-00 | ,, | 4-30 | ,, —ஸர்வ தரிசனம் |
| 4-30 | ,, | 5-00 | ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-50 (நான்கு நபர்கள் அனுமதிக்கப்படுவர்) |
| 5-00 | ,, | 5-15 | ,, —நித்ய அர்ச்சனை |
| 5-15 | ,, | 5-45 | ,, —சுத்தி, முதல் மணி |
| 5-45 | ,, | 7-00 | ,, —ஸர்வதரிசனம் |
| 7-00 | ,, | 7-30 | ,, —சாலிம்பு |
| 7-30 | ,, | 9-00 | ,, —தாயாருக்கு அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம) |
| 9-00 | ,, | 10-00 | ,, —அலங்காரம், 2வது மணி |
| 10-00 | ,, | 8-00 இரவு | —ஸர்வ தரிசனம் |
| 7-00 | ,, | 8-00 | ,, —கண்ணாடி மண்டபத்தில ஊஞ்சல் சேவை. (ரூ. 150/-செலுத்தி பங்கேற்கும் இரு நபர்களுக்கு சுமார் 5 கிராம எடையுள்ள வெள்ளிப் பதக்கம் வழங்கப்படும்) |
| 8-00 | ,, | 8-30 | ,, —இரவு மணி |
| 8-30 | ,, | 9-00 | ,, —ஏகாந்தசேவை |

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

I தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

**II ஆர்ஜிதம்**

| | | |
|---|---|---|
| (அ) பொங்கல் | ½ அளவு | ரூ. 55/- |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 50/- |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 40/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 85/- |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 65/- |
| (ஊ) தோசைப்படி | ,, | ரூ. 35/- |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 90/- |
| (ஏ) ஸீரா | ,, | ரூ.155/- |

**III சேவைகள்**

| | |
|---|---|
| (அ) நித்ய அர்ச்சனை (ஆண்டொன்றுக்கு) | ரூ. 150/ |
| (ஆ) ஸகஸ்ரநாமஅர்ச்சனை | ரூ. 6-50 |
| (இ) அர்ச்சனை | ரூ. 1-00 |
| (ஈ) ஹாரத்தி | ரூ. 0-50 |
| (உ) பூராபிஷேகம் (வெள்ளிக்கிழமையில் மட்டும்) | ரூ.100-00 |
| (ஊ) ஊஞ்சல் சேவை (வெள்ளிக்கிழமை மாலையில் மட்டும்) | ரூ.150-00 |
| (எ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஏ) யானை வாகனம் | ரூ. 32-00 |

* திருப்பதியிலிருந்து 3 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

என்றிவ்வாருக பகவத்ராமானுஜ முனிவர் நன்ருக ஆராய்ந்து நிச்சயித்துப் பிறருக்கும் விவரமாகக் கூறினர்.

அதனுல் தான அவர் முன்பு ஒரு யாத்திரையில் ஆழ்வார்களைப் போல் தாமும் திருவேங்கடமலையில் பாதம் வைத்தேறப் பொருமல் அதன் அடிவாரத்திலேயே வெகுகாலம் வசித்து வந்தார். திருமலை நம்பிகள் அனந்தாழ்வான முதலியோர் பலதடவைகள் நிர்ப்பந்தம் செய்து வேணடிக் கொணட போதிலும் அடிக்கடி அங்குச் செல்ல அங்கீகரிசகவில்லை. பின்பு ஸ்காந்த புராண முதற்பகுதியில் ஒன்பதாமத்தியாயததில், 'புண்ணியததை மேன்மேலும் வளர்க்கும் அவ்வேங்கடமலையை இவ்விதமாக ப்ரார்த்திக்க வேணடும். தேவர் அனைவரும் வசிக்குமிடமாய்ப் பிரமன முதலியோராலும்கௌரவித்துவணங்கப்பெற்று மிகப் புணணியமான பொன்மலையரசே உன்னை நான் காலால் மிதித்தேறுகிறேன். பாவமனம் படைத்த என்னுடைய இப்பாவத்தைக் கருணையினுல் பொறுத்தருளவேணும். உனது சிகரத்தில் உறைந்தருளும் திருமாலை எனக்குக் காட்டியருள வேணும என்று இவ்வாறு ப்ராாததனை செய்துவிட்டுப் பிறகுதான் மனிதன் புனிதமான திருவேங்கடமலையினைகண மெல்ல மெலல அடிவைத்துச் செலலக் கடவன்' என்றுள்ள வசனங்களைக் கண்டு, இப்படிப்பட்ட நியமத்துடன திருவேங்கடமலையேறுவதில புராணகாரர் இசைநதிருப்பதைச சிந்தை செய்து, இந்த நியமத்தின்படியே எப்போதாவது ஒவ்வொரு தடவை மட்டுமே திருமலையேறிப் பெருமாளைச் சேவித்துக் கொணடு பெரும்பாலும திருப்பதியிலேயே தங்கியிருந்து திருமலை அடிவாரத்திலேயே திருமலைநம்பிகள் திறத்தில் ஸ்ரீராமாயணம் படிக்கவாரம்பித்தார்.

(தொடரும்)

# ★ பழையாறை சிற்பங்கள் ★



இராஜராஜசோழன் காலத்தில் மிகப்பெரிய நகரமாக விளங்கியது பழையாறை. ஐந்து மைல் நீளமும் இரண்டு மைல் அகலமும் கொண்டதாக இருந்தது. இராஜராஜன் ஆண்ட காலத்தில் மிகப்பெரிய அரண்மனை இருந்ததாம். இப்போதுஇல்லை. ஆனுல் அவன் எடுப்பித்த சோமனுதர் ஆலயம் உளது. தாராசுரம் புகை வண்டி நிலையத்திலிருந்து தெற்கே மூன்று மைல் தூரத்தில் உள்ளது. கி. பி. ஏழாம் நூற்றுண்டில் பழையாறை எனவும் கி. பி. எட்டாம் நூற்றுண்டில் நந்திபுரம் எனவும், கி.பி. பதினென்றும் நூற்றுண்டில் முடிகொண்ட சோழபுரம் எனவும், கி. பி. பன்னிரெண்டாம் நூற்றுண்டில் இராஜராஜபுரம் எனவும் வழங்கப் பெற்றது. அக்கால சோழ அரசர்களின் தலைநகரமாக விளங்கியது. சோழன் மாளிகை என்ற இடம் உள்ளது. கி. பி. 10-11 நூற்றுண்டுகளில் குந்தவை பிராட்டியார், செம்பியன் மாதேவி ஆகியோர் இங்கு வாழ்ந்தனர் என்று கல்வெட்டுகள் கூறுகின்றன.

இந்த ஊரைச் சுற்றி பல ஆலயங்கள் உள்ளன. சிவன் கோவில்களும் பெருமாள்கோவில்களும் இருந்தன. இந்நகரம் மாடவீதி தேர்வீதி முதலிய வீதிகளால் சிறந்து விளங்கியது. 12 மாதங்களும் திருவிழாக்கள் நடைபெற்றன. கம்பட்டம் என்ற நாணய சாலை இங்கு இருந்ததாம்.

பல்லவர் காலத்தில் மூன்றும் நந்திவர்மன் ஆட்சியில் இருந்தது. கி.பி 957—970 வரை இரண்டாம் பராந்தகச் சோழன் ஆண்டான். இவனுக்கு சுந்தரசோழன் என்ற பெயரும் உண்டு. மிக அழகானவன். இவனுடைய மனைவியோ சேரன்மாதேவி வானவன்மாதேவி. இவனுடைய மக்கள் ஆதித்த கரிகாலன், அருண்மொழித்தேவன், குந்தவை பிராட்டியார். அருண்மொழித்தேவனே இராசராசன்.

திரு. என். ராமகிருஷ்ணு
மயிலாடுதுறை.

கி. பி. 1235ல் சுந்தரபாண்டியன் இந்த நகரை வென்றுன். இவனுக்குப் பின் இந்த நகரம் முக்யத்வத்தை இழந்து விட்டது.

ஆனுல் இராஜராஜனுல் கட்டப்பட்ட சோமனுதர் ஆலயம் இன்றும் சிறபக் களஞ்சியமாக விளங்குகின்றது. 3 பிரகாரங்களை உடையது. நானூறு அடி நீளம் இருநூற்று ஐம்பது அகலமும கொண்டது. பல சந்நிதிகள் உள்ளன. கோபுரம் அழகானது.

மிக அற்புதமான திருவுருவம் கைலாசநாதருடையது. சுவாமி: சோமனுதர், அம்மையார்: சோம கலாம்பிகை? சோமதீர்த்தம் சந்திரனுல் உண்டாக்கப்பட்டது. பல தீர்த்தங்கள் உள்ளன, தலவிருட்சம் நெல்லிமரம்.



சிற்பச் செல்வங்கள் பல உள்ளன. துர்க்கையின் உருவம் அற்புதமாக உள்ளது. 6 கரங்கள். நுணுக்க வேலைப்பாடுகள் கொணடசிலை. சோமனுதர் முன்மண்டபம் ரதம் போல உள்ளது. யானைகள் இழுக்கின்றன. நடனப் பெண்களின் சிற்பங்கள் உள்ளன. அர்த்தநாரீஸ்வரர் உருவம் அழகுப் பிம்பம். யாளிகள், யானைகள், பூச்செடிகள், பூக்கள் சிற்பங்களாக உள்ளன. நரசிம்மாவதாரக் காட்சிகள் அற்புதமாக அமைந்துள்ளன. அம்மன் சந்நிதி மணடபத்தில் மனிதன் சிங்கம் சண்டை காட்டப்பட்டுள்ளது.

பக்கலில் பஞ்சகுரோச தலங்கள் உள்ளன; அவையாவன — திருநல்லூர், திருவலஞ்சுழி, திருசக்திமுக்தம், திருப்பட்டீச்சரம், திருஆவூர். இவை எல்லாம் இந்திரன் வழிபட்ட தலங்களாம். 卐

# வைணவமும் சீக்கியமும்

## பக்தி இயக்கம் :

இடைக் காலத்தில் தென் பாரதத்தில் பக்தி இயக்கம் தோன்றி வேகமாகப் பரவியது. நாயன்மார்களும் ஆழ்வார்களும் தோன்றி முறையே சைவக் கோட்பாடுகளையும் வைணவக் கோட்பாடுகளையும் மக்கள் நடுவண் விதைத்துப் பரவலாக வளர்த்தனர். அவர்களுடைய வழிபாட்டு முறைகள் சாதாரண மக்களும் பின்பற்றுதற்குத் தக்க வகையில் எளிதாக இருந்தன. இறைவனின் திருத்தலங்கள் தோறும் சென்று உள்ளம் உருகி இசைப்பாடல்களால் பாடித் துதித்தனர். வழிநெடுகிலும் உள்ள மக்களோடு உண்டு உறங்கிப் பக்தியை மக்கள் நெஞ்சிலும் விதைத்தனர்.

நாயன்மார்கட்கும் ஆழ்வார்கட்கும் பின்னர் வைணவ சைவ கோட்பாடுகளை ஆச்சாரியர்களும் - குரவர்களும் தத்துவம் கலந்த பக்தி நெறியோடு பரப்பினர். வைணவக் கோட்பாடுகள் இராமானுஜரின் தலைமையில் பாரதம் முழுதும் பரவிற்று. அவர் பாரத நாடு முழுதும் பயணம் செய்து வைணவக் கேட்பாடுகளைப் பரப்பினார்.

இராமானுஜரின போதனையின் பலனாக வட பாரதத்தில் துளஸிதாசர், மீராபாய், ஜெயதேவ், நாமதேவ், பரமானந்த் முதலிய மெய்ஞ்ஞானியர் தோன்றி வைணவப் பக்தி நெறியை வளர்த்தனர்.

பக்தி இயக்கத்தின் தாக்கத்தினால் பஞ்சாபில் குருநானக் என்னும் மகான் சீக்கியம் என்னும புதிய மதத்தினைத் தோற்றுவித்தார் வைணவப் பக்தி இயக்கத்தின் வளர்ச்சியின்போது தோன்றிய மதம் சீக்கியம்; எனவே அதன்கண் வைணவக் கோட்பாடுகள் பல ஒன்றிக் கலந்துள்ளன. இக்குறிப்புரை சீக்கியத்தில் கலந்துள்ள வைணவக் கோட்பாடுகளுள் ஆன்மீகம் தொடர்பானவற்றைச் சுட்டிக்காட்டி இரண்டின் வேறுபட்ட வழிபாட்டு முறைகளையும் எடுத்துரைக்க முனைகின்றது.

## வைணவம்

### இறைவன் :

வைணவம 'விஷ்ணு'வை முழுமுதற்கடவுளாகப் போதிக்கின்றது: விஷ்ணு எல்லாப் பொருளிடத்தும் எங்கும் எக்காலத்தும் உள்ளும் புறமுமாக நிறைந்து இருக்கும் ஆற்றலுடையவர்; அனைத்துப் படைப்புகட்கும் முதல், இடை, இறுதியாக விளங்குகின்றார்.

'ஸர்வம் விஷ்ணுமயம்'
(பாகவதம் 2-23-22)

'வாஸுதேவ ஸர்வம இதி'
(பகவத் கீதை 7-19)

'அஹம் ஆதிஸ்ச மத்யம் ச பூதானாம் அந்த ஏவ ச'
(பகவத் 10-20)

விஷ்ணுவுக்கு இறப்போ பிறப்போ ஏற்படுதல் இல்லை. அவர் காலவரையறைக்கு அப்பாற்பட்ட 'ஸத்' (நிரந்தமான ஆற்றல்) ஆக இருக்கிறார். (பகவத் 7-25).

அவர் ஒருவரே இவ்இயற்கையைப் படைப்பவராகவும, காப்பவராகவும், ஒடுக்குபவராகவும் செயலாற்றுகின்றார்.

'அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ: மத்த:'
(பகவத் 10-8)

'ஸர்காணாம் ஆதிர் அந்தஸ் ச மத்யம் சைவாஹம் அர்ஜுனா'
(பகவத் 10-32)

வைணவ நெறிகள் இறைவனுக்குரியது என வலியுறுத்துகின்ற இயல்புகளுள் ஐந்தனைத் தலையானவாகக் கொள்ளலாம்.

1. இவ்வுலகில் உள்ள தர்மவான்களுக்கும தர்மத்திற்கும் (அறநெறி) கேடு தோன்றி அவற்றை நசுக்கிக் கொண்டிருக்கும் காலத்தில் தர்மவான்களைக் காத்து தீயர்களைத் திருத்தி அல்லது அழித்து மீண்டும் அறநெறிகளை நிலைநாட்டும் பொருட்டு விஷ்ணு அவதரிப்பார்.

"பரித்ராணாய ஸாதூநாம் விநாஸாய ச துஷ்க்ருதாம்
தர்ம ஸம்ஸ்தாபனார்தாய ஸம்பவாமி யுகே யுகே"
(பகவத் 4-8)

2 இறைவன் மனம், மொழி, மெய்களின் சிந்தனை, சொல், செயலுக்கு எட்டாத பரத்வம் (மேம்பாடு) உடையவர். அவரது மேம்பட்ட குணங்களாக அறிவு, ஆளுந்திறமை, தகுதி, பலம், படைக்குமாற்றல், அற்புதம் எனனும ஆறும் கூறப்படுகின்றன.

'நான்' அழியத்தக்கதான உலகத்திற்கு எட்டாதவனும் அழிவற்றதான ஆன்மாவுக்கு மேம்பட்டவனாகவும் விளங்குகின்றேன்' (பகவத். 15-18).

'பலம் பலபதாம ச அஹம்'
(பகவத். 7-11)

3. இறைவனின் ஆற்றலை வெளிப்படுத்துவோராக (வ்யூஹா) வாஸு-

---

புலவர். பி சுயம்பு,
மதுரை-26.

தேவர், ஸங்கர்ஷணர், பிரத்யும்நன், அநிருத்தன் ஆகியோர் விளங்கு கின்றனர்.

4. இறைவன் அனைத்து உயிர்களி லும் அகத்தில் அமர்ந்து (அந்தர் யாமின்) அவற்றை ஆட்சி செய்கின் ருர்.

' அஹம் ஆத்மா குடாகேஸ ஸர்வ
பூதாஸ்யஸ்தி '
(பகவத். 10-20)

5. கோவில்களில் வழிபடப்படு கின்ற உருவங்களின் (அர்ச) வழி யாக அவரது அருளை உருவ வழிபாடு செய்வோருக்கு விஷ்ணு அருளுகின் ருர். இறைவனை வழிபடும் முறை மைக்கு ஏற்ப அவர் அருள்புரிய வல்லவர்.

'' யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்த
தைவ பஜாம்யஹம்
மம வர்த்மானு வர்தந்தே மனுஷ்யா:
பார்த ஸர்வஸ :
(பகவத். 4-11)

சிலந்திப் பூச்சி தன்னிலிருந்து நூலை உண்டாக்கி விழுங்கி விளை யாடுதல் போன்று இறைவனும் தனது மாயையால் தன்னில் இருந்து உலகையும் உயிரையும் உருவாக்கித் தன்னில் ஒடுக்கிக் கொள்ளுகின்ருர். உயிருக்கு அதன் கர்ம பலனுக்கு ஏற்ப இறைவன் பிறப்பு, இறப்பு, விடுதலை (முக்தி) என்பவற்றை அருளிச் செய்கின்ருர். (பாகவதம் 2, உத்தவ கீதை. 23 மற்றும் பகவத். 7-25, 9-8)

## ஆன்மாவும் அதன் குறிக்கோளும்.

"ஆத்மா ஒன்றேதான். அது சுயமபிரகாசமானது. அழிவற்றது. அது உடலினின்று வேறுபட்டது. குண சம்பந்தம அதற்கு இல்லை. அது ஆகாயம், காறறு, தீ, நீர், நிலம முதலிய பூதங்கள் தாம் சேரும் இடத்திற்கேறபத் தோன்றுதல் போலவும் மறைதல் போலவும் சிறிது போலவும் பெரிது போலவும் தோற்றமளித்தலைப் போன்று ஆத் மாவும் பல போலவும் பிறப்பது போலவும் இறப்பது போலவும் தான் சேருகின்ற குணம், உடலுக்கு ஏற்ப அறியப்படுகின்றது'' (பாகவதம் 2-75-24, 25)

ஆத்மா ஆணவத்தின் திறத்தால் மாயைக்கு உட்பட்டுக் கர்மம் இயற்றுகின்றது. அதன் பலத்திற்கு ஏற்ப அது பிறந்தும் இறந்தும் சம் சாரச் சக்கரத்தில் சுழன்று வருகின் றது (பகவத். 9-8).

ஆத்மாவின் குறிக்கோளாவது அது தன்னிலை உணர்ந்து மீண்டும் இறை வனேடு இரண்டறக்கலத்தலாகும். இதுவே முக்தி எனப்படுகின்றது. ஆதமா ஆணவத்தினின்று விடுபட்டு இறைவனிடம் முழுமையாச் சரண டைதலே முக்தி பெறுதற்கான தீர் மானமான நெறியாகும். தன்னை முழுமையாகச் சரணடைவோரிடம் இறைவன் நெருக்கம் ஏற்படுத்தி அவர்களைத் தம்மோடு ஐக்கியப் படுத்திக் கொள்ளுகின்ருன் (பாக வதம் 2, நவயோகி ஸம்வாதம் 2-51) இக்கோட்பாடு இராமாயணத்தின் மூலக்கருவாக அமைந்திருத்தலை அறியலாம்.



மதுரை மீனுட்சி அம்மன் கோயிலும் பொற்றுமரைக் குளமும்.
திரு. வி. முத்துராமன் - கோவை.

## வழிபாடு :

இறைவனோடு ஒன்றுதற்குரிய நெறிகள் யுகத்திற்கு யுகம் வேறுபடுதலைப் பாகவதம் விளக்குகின்றது. கிருதயுகத்தில் மன அடக்கம் என்னும் நெறியாலும், திரேதாயுகத்தில் தர்ம, வேத வித்தையாலும், துவாபர யுகத்தில் வேத ஆகம நெறிகளின் படி அமைந்த வழிபாடுகளினாலும், கலியுகத்தில் இசைப் பாடல்களைப் பாடித் துதிப்பதாலும் இறைவனை அடைதல் இயலும் (பாகவதம் 2, நவயோகி ஸம்வாதம் 5, 22-25).

## சீக்கியம் :

### இறைவன் :

இறைவன் பற்றிய கோட்பாடுகளைச் சீக்கிய மதத்தின் மூல மந்திரம் மிகத் தெளிவாகவும் சுருக்கமாகவும் குறிப்பிடுகின்றது.

'' இக் ஓங்கார் ஸதிநாமு கர்தா புருஹு
நிர்பௌ நிர்வைரு அகால மூர்த்தி
அஜூனி ஸைபான் குருப்ரஸாதி''
(ஜப்ஜி 1)

''இறைவன் ஒருவனே; அவனது பெயர் 'ஸத்' என்பது. அவனே இந்த இயற்கை முழுதும் படைக்கின்றான். அச்சம், பகைமை, கால வரையறை அவனுக்கு இல்லை. அவன் இறப்பு, பிறப்பு இல்லாதவன். இறைவன் எங்கும் எல்லாவற்றிலும் உள்ளும் புறமுமாக நிறைந்து இருக்கும் 'சுயம்பு' ஆனவன்.

அவன் குருவின் வழியாக அருள வல்லவன்.''

''அவன் நேற்று இருந்தான்; இன்று இருக்கின்றான்; நாளை இருப்பான்'' (ஜப்ஜி 2).

''இறைவன் வடிவம் அற்றவன்'' (ஆஸாகி வார்).

''அவன் படைக்கப்படவில்லை; அவனே படைக்கிறான்; அனைத்திலும் நிறைந்துள்ளான்; அவனை வழிபடுவோர் அடைவர்'' (ஜப்ஜி 5).

''அவன் தனது மாயையால் படைப்போன், காப்போன், அழிப்போனாகச் செயலாற்றுகின்றான்'' (ஜப்ஜி 30).

''இறைவனது ஆணைக்குட்பட்டு அனைத்தும் நிகழுகின்றது; அவனது ஆணைக்கு யாரும் விடுபடுதல் இயலாது'' (ஜப்ஜி 2).

''இறைவனது ஆற்றல் மனம், மொழி, மெய்கட்கு அப்பாற்பட்டது'' (ஆஸாகி வார்).

### ஆத்மா :

ஆத்மாக்கள் எண்பத்து நான்கு லட்சம் வகைப்படும். இதனைக் குறிக்கும் வகையில் குரு அமர்தாஸ் ஒரு புனிதத் தடாகத்தை ('பவாலி') அமைத்து அதில் எண்பத்து நான்கு படிகளை அமைத்தார். ஆத்மாக்கள் ஆணவத்தின் ('ஹூமை') வயப்பட்டு உலக ஆசைக்குட்படுகின்றன. அதனால் அவை கர்மா (செயல்) இயற்றுகின்றன; கர்மாவின் பலனுக்கேற்ப மீண்டும் மீண்டும் பிறந்தும் இறந்தும் சுழலுகின்றன. ஆணவம் விலகும் போது ஆத்மாக்கள் இச்சம்சாரச் சுழற்சியிலிருந்து விடுதலை அடைகின்றன.

''மனிதனே விதைத்து அவனே பலனை அடைகின்றான்'' (ஜப்ஜி 20).

''அஹங்காரம் இருக்குமிடத்து இறைவன் இருப்பதில்லை; இறைவன் இருக்குமிடத்து அஹங்காரம் இருப்பதில்லை '' (சரூஸ் 1245).

### வழிபாடு :

சீக்கிய மதம் காலத்திற்கும் மனித வாழ்க்கையின் தரத்திற்கும் ஏற்றதாக முக்தி பெறுதற்கான வழிபாட்டு நெறி அமைதல் வேண்டும் என வலியுறுத்துகின்றது. குரு கோவிந்த் சிங் ''குருநானக் கலியுகத்தின் மதம் எனச் சீக்கிய மதத்தை நிறுவினார்'' (விசித்ர நாடக்: 3) எனச் சுட்டுகின்றார். கலியுகத்தில் இறைவனின் திருநாமத்தை ஜபித்து உள்ளன்போடு அவனை தியானித்தலே தலைசிறந்த முக்தி நெறியாகும். ஏனைய உருவ வழிபாடு, வேள்வி, உயிர்ப்பலி, புனித பயணம் போல்வன வெறும் ஆடம்பர நாடகங்களே எனச் சீக்கியம் வலியுறுத்துகின்றது.

''நீரால் நெல்லை அவிப்பது போல இறைவன் நாமத்தால் (உலக) ஆசையை அவியுங்கள்'' (ஸ்ரீராக் 22)

''கலியுகத்தில் கடவுள் பெயரை ஜபித்தலே ஆத்மாக்கள் முக்தி பெறுதற்கு உகந்ததும் சரியானதுமான நெறியாகும்'' (ஸூஹி).

### ஒப்பாய்வு :

துளஸிதாசர், மீராபாய் முதலிய மெய்ஞ்ஞானியரின் பக்திப் பாடல்கள் வைணவ, சீக்கிய மதங்களின் புனித நூற்றொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

வைணவம் இறைவனுக்குரியதாகச் சுட்டும் 'அவதாரம்' சீக்கியத்தில் ஏற்கப்படவில்லை. உருவ வழிபாடு வைணவத்தில் உண்டு; சீக்கியத்தில் இல்லை.

ஆத்மா ஒன்றே உளது என வைணவமும் அது பலவகைப்படும் எனச் சீக்கியமும் வரையறுக்கின்றன.

முக்தி பெறுதற்கான வழிபாட்டு முறைகளை வரையறுப்பதில் வைணவம் பரந்த நோக்கத்துடனும், சீக்கியம் குறிப்பிட்ட ஒரு எல்லையினை உடையதாகவும் காணப்படுகின்றன.

✶

---

### அறிவிப்பு

ஸப்தகிரிக்கென்று ஒரு வருடம் அல்லது அதற்கு மேற்பட்ட காலத்திற்கு அனுப்பப்படும் சந்தாத் தொகை மட்டுமே ஏற்றுக்கொள்ளப்படும். ஒரு வருடத்திற்கும் குறைவான கால அளவுக்காக அனுப்பப்படும் சந்தாத் தொகை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

ஆண்டுச் சந்தா ரூ. 12/-

---

# மழையும் விராடபர்வமும்

திரு. ஸ்ரீ. சீனிவாசன், எம் ஏ பி எட்.,
பரமக்குடி.

உலகத்தின் முதல் படைப்பே நீராகும். பிரம்மதேவன் நீரையே முதலில் படைத்தார் என்பதை, "ஆபயேவஸ ஸர்ஜாதௌ" எனும் வேதவாக்கியத்தால் அறியலாம்.

முதற்படைப்பாகிய நீரே உடலுக்கும் முக்கியமாக அமைகிறது. இந்நீருக்கு அதிதேவதை வருணனாகும்; மழைக்கு அதிதேவதை பர்ஜந்யன் ஆவான். நீரைவழங்கும் இத்தேவதை மிகுந்த சக்தி உள்ளவன் எனக்கருதப் படுகிறான்.

அந்தணர்கள் செய்யும் சந்தியா வந்தனம் எனும் வழிபாட்டில், 'இமம் மே வருண' எனும் மந்திரமானது நீருக்கு அதிதேவதையான வருணனை போற்றுகிறது.

"உருஸகும் ஸமாந ஆயு:ப்ர மோஷீ" எனும் தொடரால் "ஏ வருணனே! நீயே நீருக்குத் தேவதை. நாங்கள் உன் கருணையை எதிர்பார்த்துச் சரணடைகிறோம். நம்பியவர்களுக்கு அருள்புரிகிறாய்: செடிகொடிகள் பசு, பறவைகள், புற்பூண்டு முதல் பிரம்மாதிதேவர்கள் வரையும் உன்னையே நம்பி வாழ்கின்றனர். உன்னிடமிருந்தே புற, அகத் தூய்மைகளை அடைய முடிகிறது. எனவே மாதம் மும்மாரி பெய்து எங்களின் தாபத்தைப் போக்கி எங்களை நீ காப்பாயாக' என்று வருணனை வேதம் துதிக்கிறது.

இதுபோல ரிக்வேதத்திலும், "இதம் ஆப: பரவகத" என்று மந்திரத்தால் "அறியாமையால் மக்கள் செய்யும் தீமையால் கோபமுறாது அதைப் பொறுத்து மழை பொழியச் செய்து எங்களை சுபிட்சம் அடையச் செய்வீராக" என்றும் கூறுகிறது.

"யாத்வா அகம் அபிதுத்ரோக" எனும் தொடரால் மழைவராமல் இருக்கும் காரணத்தையும் வறட்சிக்குரிய காரணத்தையும் கூறுகிறது.

பசியும் தாகமும் சேர்ந்ததே பஞ்சமாகும். "ஸுச்சதிருஷ்ண ச", என்கிறது வேதம். அதாவது தண்ணீர் இல்லாமையால் பசி, தாகம் ஏற்படும் என்பதாகும்.

தண்ணீர் ஏன் இல்லை? 'அபாச்னும்னும் அபாரஹ!அபாக்ராம் அபசுவர்த்திம்" எனும் தொடரினால் மக்களின் பாபம் மேலிட்டால் மழை வராது என்கிறது வேதம். இக்கருத்தையே வியாசரும், வில்லியும் ஐந்தாவது வேதமாம் மகாபாரதத்தில் விராடபர்வமாக மக்கள் அறியுமாறு விரிவுபடுத்துகிறார்கள்.

அத்தினபுரத்தில் பீஷ்மர், துரோணர், கிருபர் போன்ற உத்தமர்கள் இருந்தாலும் நாடு செழிப்பாக இல்லையே ஏன்?

"அகிருத்யம் தார்த்தராஷ்டிராணும்" எனும் தொடரால் வியாசர் விளக்குகிறார். மேல் தொட்டியில் தண்ணீர் இருந்தும் குழாயில் அடைப்பு இருந்தால் தண்ணீர் வருவதில்லை. அதுமாதிரி மகான்கள் இருந்தாலும் பெண்ணின் சேலையை அவிழ்ப்பதும், பொறாமை மேலிட்டு, எளியோரைக் கொல்லத்திட்டமிடுவதும், இவர்கள் துன்பத்தைக் கண்டு மகிழ்வதும் உடைய துரியோதனன் எனும் அடைப்பினால் மழையில்லாமல் போயிற்று என்கிறார் வியாசர். இதனையே வில்லியும் வீடுமர் கூற்றாக,

"அறன் காளையுறைநாடு உன் ஒற்றர் உணருதற்குவருமோ?" எனும் தொடரால் விளக்குகிறார். இத்தொடரால் வீடுமன் துரியோதனனை அறமற்றவன் என்று கூறியிருப்பதைக் குறிப்பால் உணர்கிறோம்.

எனவேதான் கொடியவன் இருந்த நாட்டில் மழையில்லை. அக்கொடியனும் நலமாக இருக்க வேண்டும் என எண்ணிய தருமர் இருக்கும் இடமான விராட நாட்டில், கீசக வதம் முடிந்தவுடன் மழைபொழிந்திட நாடு வளமுடையதாயிற்று என்கிறார் வில்லி. பாண்டவர் இருக்குமிடத்தில் மழையும், நல்வினையும் இருக்கும் என வீடுமன் கூறுகிறான்.

"அறன் காளை உறைநாடுகார்
மின்றெற்றும் மழையுண்டு
விளைவுண்டெனத் தேடும்"

என்பது அத்தொடர்களாகும்.

தருமம் உடையயோர் தங்குமிடத்து மழைவளம் செழிப்பது இயல்பு. இதனை,

"நல்லார் ஒருவர் உளரேல அவர்
பொருட்டால்
எல்லார்க்கும் பெய்யுமழை"

என்ற தொடர்களாலும்,

"மழையும் தவமிலாகில் வழியில்லை"
"நிலத்தியல்பு வானமுரைத்துவிடும்"

எனும் தொடர்களாலும் நாம் அறியலாம். இவ்வுண்மையை நாமறிந்து அறமுடைய வாழ்வு வாழ வேண்டும் என்ற உறுதிப்பாட்டினை எடுத்துக்கொள்ளவே விராட பர்வம் பரம்பரையாக வாசிக்கப்படுகிறது. வேதத்தில் ஒரு பகுதியை வருண ஜெபமாக செய்வது போல மகாபாரதத்தின் விராட பர்வத்தை மழைக்காக வாசிக்கப்படுவதினால் இதனை ஐந்தாவது வேதம் எனப் பெயரிட்டனர். வில்லியும்,

"நீடாழி உலகத்துமறை நாலோடு
ஐந்தென்று நிலைநிற்கவே"

என்று பாடினார்.

எனவே இவ்விராடபர்வத்தை மழையில்லாக் காலங்களில் ஆலயங்களில் வாசிக்கச் செய்து இறையருளை வேண்டி மழை பெறுவோமாக.

卐

# தானமும் தவமும்

உலகத்தில் மழையே பெய்ய வில்லையென்றால், நடக்கவேண்டிய இரண்டு வேலைகள் நடக்காமல் போய் விடும என்கிறார் திருவள்ளுவர். அந்த வேலைகளில் ஒன்று தானம். மற்றொன்று தவம்.

'' தானம தவம் இரண்டும் தங்கா
வியனுலகம்
வானம் வழங்கா(து) எனின் ''

தானம் என்பது நம்மிடம் உள்ள தைப் பிறருக்குக் கொடுத்து உதவு வது. தவம என்பது நமக்கு வரு கின்ற துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு, பிற உயிருக்கு ஒரு துன்ப மும் செய்யாமல் இருப்பது.

தானம் இல்லறத்தார்க்கு உரிய கடமை. தவம் துறவறத்தார் மேற் கொள்ள வேண்டிய கடமை.

வீட்டில் இருந்து மனைவி மக்க ளோடு இல்லறம் நடத்துவதெல்லாம் எதற்காக? விருந்தினரைப் போற்றி அவாகளுக்கு உதவுவதற்காகவே! விருந்தினர் என்பவர் நமக்கு முன்ன மே அறிமுகம் ஆகியிராத புதியவர். அத்தகைய புதியவர்களைப் போற்று வதே விருந்தோம்பல். அவர்களுக்கு உதவி செய்வதே வேளாண்மை.

'' இருந்தோம்பி இல்வாழ்வதெலலாம்
விருந்தோமபி
வேளாண்மை செய்தற் பொருட்டு ''

பெரு முயற்சி செய்து ஈட்டுகின்ற பொருள் எல்லாம் எதற்கு? தகுந்த வர்களுக்கு-தேவைப்பட்டவர்களுக்கு உதவி செய்வதற்கே! அப்படி உதவு வதே வேளாண்மையாகும்.

'' தாளாற்றித் தந்த பொருள்எல்லாம்
தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு ''

அந்த வேளாண்மைக்கு மற்றொரு பெயர்தான் தானம் என்பது.

அந்த தானம்தான் தலைசிறந்தது. அந்த தானத்தைத்தான் உலகத்தில் தோன்றிய சிறந்த நூல்கள் எல்லாம் வலியுறுத்துகின்றன.

நூல் எழுதிய அறிஞர்கள் எல் லோரும் தொகுத்துக் கூறியவற்றுள் தலையாயது, முதன்மையானது எது என்றால், நமக்குக் கிடைப்பதை எல் லோர்க்கும்பகுத்துக்கொடுத்துப் பல உயிர்களையும் பாதுகாக்கவேண்டும் என்பதுதான்.

'' பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்
நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை ''

தான் என்கின்ற முனைப்பும், தனது என்கின்ற பற்றும் இல்லாமல் போகச் செய்வது தவம்.

தனக்கு யார் என்ன துன் பம் செய்யினும் அதனைப் பொறுத் துக் கொண்டு, மற்றவர்க்கு-தனக்குத் துன்பம் செய்தவர்க்கும் துன்பம் செய்யாமல் இருக்கின்ற நிலையே, தான் என்கின்ற முனைப்பு அற்றநிலை.

தனக்கென்று எதனையும் வைத்துக் கொள்ளாமல், எதன்மீதும் பற்று வைக்காமல் வாழ்கின்ற நிலையே, தனது என்னும் பற்றற்ற நிலை.

அந்த உயர்ந்த நிலையை அடைவ தற்காகத் தவம் செய்பவரே தம் கடமையைச் செய்பவர் ஆவர். மற் றையோர் தம் கடமையைச் செய்ப வர் ஆவர். மற்றையோர் ஆசை வலை யில் அகப்பட்டு வீண் பொழுது போக்குபவரே ஆவர்.

'' தவம் செய்வார் தங்கருமம்
செய்வார்மற் றல்லார்தார்
அவம் செய்வார் ஆசையுட் பட்டு ''

தவம் மிகச் சிலரால் மட்டுமே செய்யக்கூடிய ஒன்று. ஆனால் தானமோ எல்லோராலும் செய்யக் கூடியது. இல்லறத்திலிருந்து வாழும் பெரும்பாலோரின் கடமை தானம் செய்வது.

தானத்தில் பலவகை உண்டு.

பொருள்தானம், கல்விதானம், மருந்துதானம், அறிவுதானம், உழைப்புதானம், உணவுதானம் என்ற பலவகை தானங்களில் சிறந் தது உணவு தானமே-அன்னதானமே என்பர்.

திருவள்ளுவர்முதல் அருணகிரி யார் வரை இந்த உணவு தானத்தை யே சிறப்பித்துக் கூறுகிறார்கள். பசித் தவர்க்கு உணவு இடுவதே சிறந்த செயல் என்கிறார்கள்.

ஒருவன் பொருளைச் சேர்த்து வைக்க வங்கியைத் தேடி எங்கும் போகவேண்டாம். ஏதுமற்ற ஏழை யரின் பசியை அவன் ஆற்றிவந்தாலே போதும்.

தான் ஈட்டிய பொருள் பின்னால் தனக்குப் பயன்படவேண்டும் என்று சேர்த்து வைக்கத் தகுந்த இடத்தை ஒருவன் தேடி அலைய வேண்டாம். ஏழை மக்களின் பசியை ஆற்றி வந் தாலே அவன் பொருளைச் சேர்த்து வைத்துக் கொண்டதாகத்தான் பொருள் என்கிறார் திருவள்ளுவர்.

'' அற்றார் அழிபசி தீர்த்தல்
அஃதொருவன்
பெற்றான் பொருள் வைப்புழி ''

இந்த மண்ணுலகத்தில் வாழ்கின்ற வர்களுக்கு பசியாற உணவு கொடுத் தோர் உயிர் கொடுத்தோர்க்கு நிக ராவர் என்கிறார் மணிமேகலை ஆசிரி யர் சீத்தலைச் சாத்தனார்.

திரு. நீ. தங்கவேலன்,
வேலூர்.

28 ம் பக்கம் பார்க்க

# வாய்-கை-கண்-காது

திரு. ர. வேங்கடரத்தினம்,
நெய்வேலி.

முதல் திருவந்தாதி - பொய்கையாழ்வார் அருளிச் செய்தது. அந்த நூறு வெண்பாவில் ஒரு பாசுரத்தை மட்டும் இங்கே பார்ப்போம்.

வாயவனை அல்லது வாழ்த்தாது,
கை உலகம்
தாயவனை அல்லது தாம் தொழா-
பேய் முலை நஞ்
சூணாக உண்டான் உருவொடு பேர்
அல்லால
காணாகண் கேளாசெவி.

பதினோராம் பாசுரம் இது.

பொய்கையாரின் அனன்ய பக்தி நமக்கு இங்கே தெளிவாகிறது. பாசுரத்தில் ஆழ்வார் ஆண்டுள்ள சொற்கள் அவ்வளவுமே அரும்பத உரை வேண்டாத எளிய சொற்கள். வேண்டுமானால், தாயவன்=தாவி அளந்தவன், ஊண்=உணவு என்று இரண்டு பதங்களுக்குப் பொருள் கூறலாம்.

இங்கே ஆழ்வார் தமது நான்கு உறுப்புகளைப் பற்றிப் பேசுவார். வாய், கை, கண், செவி என்ற நான்குமே அவை. எம்பெருமானின் புகழ் பாடுவதற்காக அமைந்தது அடியாரின் வாய், வேறு பேச்சுப் பேசாது. கையும் அவ்வண்ணமே ஈசனையே தொழுவன. வேறு எவர்க்கும், எதற்கும் கும்பிடு போடமாட்டா. ஆழ்வாரின் பார்வையும் வேறு எதிலும் செல்ல மாட்டாது. கண்கள் கடவுளையே பார்க்கும்; காதும் வேறு எவர் பேரினையும் கேட்க மாட்டா.

இவ்வளவுதான் பாசுரத்தின் விஷயம்.

இந்த விஷயத்தை நயமாக எடுத்துரைப்பது பொய்கையாரின் எழுதுகோல்.

பாசுரத்தில் எம்பெருமானின் இரு அவதாரங்கள் பேசப் பெறுகின்றன. ஒன்று வாமன அவதாரம்; மற்றது கிருஷ்ண லீலை. வாய் அவனைத் தவிர எவரையும் வாழ்த்தாது எனத் தொடங்கும்போது, நமக்கு ஒரு சிறு திகைப்பு-அதிசய உணர்வு எழுகிறது. எவனை அல்லது என்ற கேள்வி எழும்!

அவன் சர்வேசுவரன் என்பது உடனேயே, தொடர்ந்து படிக்கும்போது நமக்குத் தெளிவாகிறது. அவனுடைய இரு லீலைகள் நமக்கு இன்னும் நல்ல அறிமுகம் கிடைப்பதற்காக, இங்கேக் கூறப்படுகின்றன.

அன்று, வெகுநாள் முன் மாணிக் குறளாக வந்த திருமால் மூன்றடி மண் கேட்டு, ஈரடியினால் மூவுலகினையுமே அளந்து விடுகிறார். அந்த அதிசயத் திருவடியை நாம் கைக்கூப்பி வணங்க வேண்டும் என்பது ஆழ்வாரின் உபதேசம் நமக்கு. இங்கே இன்னொரு விஷயமும் நாம் சுவைத்து இன்புறலாம். பகவானின் கைங்கரியம் அவரது எந்த அவயவத்தின் மூலமாகவும் நடைபெறலாம். கீதோபதேசம் சுவாமியின் திருவாயிலிருந்து நமக்குக் கிட்டிய அமுதம். ஹிரண்ய வதம் முக்கியமாகச் சிங்கப் பெருமானின் திருநகங்களும் திருப்பற்களும் செய்து முடித்த அதிசய நிகழ்ச்சி. சகடாசுரனை உதைத்து மாய்த்தது பகவானின் திருப்பாதமே. கோவர்த்தன மலையை ஐயன் தூக்கிப் பிடித்தது ஒரு சுண்டு விரலின் சாதனை. இப்படிப் பரந்தாமன் தம திருவுள்ளப்படி, சமயத்திற்குத் தக்கவாறு தம் எந்த உறுப்பின் வாயிலாகவும் துஷ்ட நிக்ரஹ, சிஷ்ட பரிபாலனம் செய்வார்.

ஆனால், அடியார்கள் என்றுமே பொதுவாகப் பெரும்பாலும் ஐயனின் திருவடியையே போற்றி நிற்பர். பகவானின் திருமுகத்தையோ அல்லது திருத்தோள் வலியையோ தனியே பேசமாட்டார்கள். அவர்கள் தெய்வத்தின் திருவடியில் என்றும் தோய்ந்து நிற்கும் அடியவர்கள் ஆவார்கள். பரமனின் திருத்தாளிணையையே வணங்குவது சரணாகதித் தத்துவமும் ஆகும். ஆயினும், இந்த வாமன அவதார அவசரத்தில் ஈசுவரனுடைய வைபவம் திருப்பாதத்தின் மூலமே நடைபெறுகிறது, எனவே அந்த அவதாரத்திற்குப் பொருத்தமான ஓர் ஏற்றம் அடியார் உலகில் உண்டு அந்தத் திருவடியை ஆழ்வார் கைதொழுவார்.

அடுத்த நிகழ்ச்சி, பிரசித்தி பெற்ற பூதனா மோட்சம்.

கம்சனின் ஏவுதலால், கண்ணனைத் தீர்த்துக் கட்டுவதற்காக வந்தவள் பூதனை. அவள் தன் மார்பில் கொடிய விஷத்தைத் தடவிக் கொண்டு, நல்லவள் போல் குழந்தைக் கண்ணனிடம் வந்து பால் ஊட்ட முற்பட்டாள். பாலைப் பருகுகிறேன் என்று தொடங்கிய மாயக் கண்ணன் பூதனையின் உயிரையே பருகி விடுவார். கண்ணனைச் சாக அடிக்க வந்தவள், செத்துச் சாய்கிறாள். இதுதான் அந்த நிகழ்ச்சி.

பேய் முலை நஞ்சுண்டு, தாம் உயிர் தப்பி, அவளை மாய்த்தது ஓர் அதிசய நிகழ்ச்சி. விஷத்தைப் பருகியவன் உயிரோடு இருக்க, நஞ்சை ஊட்டியவள் நமன் உலகு செல்கிறாள். இப்படி எங்கேனும் நடப்பதுண்டா?

28-ம் பக்கம் பார்க்க



ஸ்ரீ பூவராஹமூர்த்தி-மூலவர்.

# ஸ்ரீ முஷ்ணம்

ஸ்ரீய: பதியான ஸர்வேச்வரன் தன் பரத்வநிலேயான ஸ்ரீவைகுண்டத்திலிருந்து பூலோகத்தில் சேதனோஜ்ஜீவனார்த்தம் அர்ச்சாவதாரமாக எழுந்தருளி இருக்கும் ஸ்தலங்களில், எட்டு இடங்களைத்தான் ஸ்வயம் வ்யக்தம் என்றும் பூலோக வைகுண்டம் என ரிஷிகளாலும், மஹநீயர்களாலும் புகழோங்க அழைக்கப்படுகின்றன.

"ஆத்யம் ரங்க மிதி ப்ரோக்தம் விமானம் ரங்க ஸம்ஞ்ஞகம், ஸ்ரீமுஷ்ணம் வேங்கடாத்ரிஞ்ச, ஸாளக்ராமஞ்ச, நைமிஸம், தோதாத்ரிம், புஷ்கரஞ் சைவ நர நாராயணாச்ரமம் அஷ்டைளமே மூர்த்தி யஸ ஸந்தி ஸ்வயம் வ்யக்தா மஹீதலே."

என்கிற புராண ஸ்லோகத்தின் படி ஸ்ரீரங்கம், ஸ்ரீமுஷ்ணம், வேங்கடாத்ரி, ஸாளக்ராமம். நைமிஸம், தோதாத்ரி, புஷ்கரம், பதரி காச்ரமம் என்கிற எட்டு க்ஷேத்திரங்கள் தான் ஸ்வயம் வ்யக்தமென்றும், இந்த இடங்களில்தான் ஸ்ரீவைகுண்டநாதன் ஸ்வயமாகத் தோன்றி ஸ்ரீவைகுண்டத்துக்கு ஸமமான அந்தஸ்துடன் ஸேவை ஸாதிப்பதாக, பல புராணங்கள் வாயிலாக இவைகளை பூலோக வைகுண்டம் என அழைக்குமாறு சிவபெருமான் பர்வதராஜ குமாரியான பார்வதிக்கு திருவாய் மலர்ந்தருளியதை ரிஷிகள் ஏககண்டமாக வழங்குகிறார்கள். இதில் ஸ்ரீமுஷ்ணம் இரண்டாவது ஸ்தானம் வகிக்கிறது. இந்த க்ஷேத்திரம் தமிழ் நாட்டில் தென்னாற்காடு மாவட்

கோ. க. வா. கோவிந்தராஜ
பாவனாசார்யா ஸ்வாமி.
ஸ்ரீரங்கம்.

டத்தில் காட்டுமன்னார் கோவில் வட்டத்தில் அமைந்துள்ள ஒரு விசேஷ ஸ்தலமாகும். நீர்வளம், நிலவளம் பொருந்தியது.

சிவ பக்தர்களால் விசேஷித்துக் கொண்டாடப்படும் சித் ஸபாதீசரான ஸ்ரீநடராஜப் பெருமான் பஞ்ச சைவ ஸ்வயம்பூ க்ஷேத்திரங்களில் ஆகாச லிங்க பிரதிஷ்டிதமான தில்லே நகர் திருச்சித்திரகூடமென்கிற சிதம்பரத்தில், கனக ஸபையில் ஆனந்த தாண்டவமாடுவதை, சயனித்துக் கொண்டே ரஸித்தபடி அமர்ந்திருக்கும் ஸ்ரீகோவிந்தராஜப் பெருமானின் ஆலயத்திற்குச் சுமார் 30 கிலோ மீட்டர் மேற்கிலும், காசிக்ஷேத்திரத்தை விட வீசம் மஹிமை கூடவே உள்ளதான விருத்த காசி என்கிற விருத்தாசலத்துக்கு சுமார் 15 கிலோ மீட்டர் கிழக்கே அமையப் பெற்றது ஸ்ரீமுஷ்ணம். 'அணியார் பொழில் சூழ் அரங்க நகரப்பன்' பள்ளி கொண்ட திருவரங்கம் பெரிய கோயிலுக்கு அடுத்தபடி ஏற்றமுள்ள இந்த ஸ்ரீமுஷ்ண ஸ்தல விசேஷத்தில் சில வற்றை அனுபவிப்போம் நாம்:

பல புராணங்களில், ஸ்ரீ முஷ்ண மஹாத்மியம் பரக்கக் கூறப்பட்ட போதிலும் ஸ்காந்த புராணத்தில் நாரதருக்குசிவபெருமானும்,ப்ருஹ்ம புராணத்தில் மரீசிக்கு கருட பகவானும், நாரதிய புராணத்தில் பரத்வாஜருக்கு ஆங்கிரஸ முனிவரும், வராஹ புராணத்தில் கூறும் பிராட்டியும் பெருமானும் ஸம்பாஷித்ததைக் கூறும் இடத்தில் சூத முனிவரும் சொல்லுகிறார்கள்.

முன் ஒரு கல்பத்தில் பூவுலகில் ஜ்ஞானஹீநர்கள் 'கோ' ரூபமான தர்ம தேவதையை வருத்திய பாவக் கொடுமைகளை தாங்கமுடியாத பூமி தேவி பாதாளத்தில் அழுந்தலானாள். பூர்வம் ஒரு கால் ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீமந் நாராயணனை ஸேவிப்பதன் பொருட்டு எழுந்தருளியிருந்த ஸனக ஸநந்தனாதியரிடம் அபசாரப்பட்ட ஸ்ரீவிஷ்ணு பாரிஷதர்களான ஜய, விஜயர்களான இருவரும், பாகவதாபசாரத்தினால் பிடிக்கப்பட்டவர்களாய், ஸ்ரீமந் நாராயணனாலேயும் க்ஷமிக்க முடியாதபடியினால், எம்பெருமானின் ஆக்ஞைப்படிக்கு பூவுலகில் அசுர ஸ்வபாவத்தோடு கூடினவர்களாய், காசிபரின் பத்னியான 'திதி'யினிடத்திலே இரட்டையர்களாய் ஜனித்தார்கள்.

ஆதிதயித்தியர்களான அவர்களிருவரும் சிலை போன்ற திடமான சரீரத்தினாலே பர்வத சிரேஷ்டங்கள் போல விருத்தியடைந்து முதலில் ஜனித்தவன் இரணியகசிபுவென்றும், இரண்டாமவன் இரணியாக்ஷஸன் என்றும் நாமதேயம் உடையவர்களாய் பூவுலகையும், சுவர்க, ஸத்ய, லோகங்களையும், ஆக்ரமித்துக் கொண்டு, ஸ்ரீவிஷ்ணு துவேஷிகளாய், இந்திராதி தேவர்களை துன்புறுத்திக் கொண்டு, அவர்களை அடக்கி அரசாள ஆரம்பித்தார்கள். இதில் இரணியாக்ஷஸனானவன் பூர்வம் ஸமுத்திரத்தினடியில் மூழ்கிப் போன பூமியைக் கண்டு பாதாள லோகத்தைக் கண்டு, பாதாள லோகத்தைப் பிடித்துக் கொண்டு துவம்சம் செய்யலானான். இதைக் கண்ட இந்திராதி தேவதைகள் வருந்தி ஸ்ரீமந் நாராயணனை "ஜிதந்தே" ஸ்தோத்திரங்களினால் ஸ்தோத்திரம் செய்து ப்ரார்த்திக்க ஸ்ரீமந் நாராயணனும் இந்திராதி தேவர்களின் துன்பங்களை உணர்ந்து அவர்களுக்கு அபயமளித்தார்.

ஸ்ரீமந் நாராயணன் தேவர்களுடையவும், பூவுலகிற்கு ஏற்பட்ட நிலையினையும் மனத்துட் கொண்டு, தேவர்களின் துயர்களையவும், பூமியை பழையபடி நிர்மாணிக்கவும் சங்கல்பித்து பிரமனின் இடது மூக்கு துவாரத்தின் வழியாக அங்குஷ்ட மாத்திரமாய், 'ஞான வராஹமாய்' குறளுருவாய் அவதரிக்க, உடனே அப்பன்றி "மஹா வராஹமாக வளர்ந்து, கடலுள் புகுந்து, மகா கூர்மையாகவுள்ள குளம்புகளினால் கரையில்லாத அந்த ஜலத்தைப் பிளந்து, உள்ளே பிரவேசித்துப் பிரளய காலத்தில் சகல ஜீவர்களுக்கும் ஆதாரமாகத் தம்முடைய குக்ஷியிடத்தரித்திருந்த பூமியைப் பாதாலத்தில் கண்டு தம்முடைய கோரப் பற்களினாலே அப்பூமியைப் பெயர்த்து எடுத்துக்கொண்டு பாதாளத்திலே நின்றும் வெளியே புறப்பட, அப்போது அந்த ஜலத்தினின்றும் கதாயுதத்தைத் தரித்துக் கொண்டு எதிராக வந்து தடுக்கின்ற ஆதிதயித்தியனாகியும், சகிக்கக் கூடாத பராக்கிரமத்தை உடையவனுமிருக்கிற இரண்ணியாக்ஷஸனைக் கண்டு, சக்ரம் போல் ஜ்வலிக்கும் கடுமையான கோபத்தையுடைய மஹா வராஹ மூர்த்தியானவர், லீலையாகச் சிம்மமானது யானையைச் சங்கரிப்பது போல், சங்கரித்துக் கஜேந்திரமானது மலையடிவாரப் பூமியைப் பிளந்து பொன் முதலிய தாதுக்களாலே சிவந்து போன கண்ட ஸ்தலமும், முகமும் உடையது போல் அவனுடைய இரத்தமயமாகிய சேற்றினாலே தம்முடைய நீல வர்ணமான திருமேனியில் பூசப்பட்டு, வெளுத்த தந்தத்தினுடைய நுனியினாலே லீலையாய்ப் பூமியை உத்தாரணம் செய்து ஸமுத்திரத்தில் நின்றும் கிளம்பி மேலே வந்து, ஆதிசேஷன் மணிமுடியில் பொலியுமாறு எழுந்தருளப் பண்ணி அப்பூமியின் மேல் நின்று இளைப்பாறினார். இந்த இடத்துக்கு



ஸ்வயம் வ்யக்த விமானமான பாவன விமானம்

'ஸ்ரீமுஷ்ணம்' என்று பெயர் சூட்டினார்கள்.

பிரமன் முதல் எல்லாத் தேவர்களும் அர்ச்சிக்க, திருவனந்தாழ்வான் குடை பிடிக்க, ஸேனை முதலியாரும், கருடாழ்வாரும் சாமரசம் வீச, தவ யோகிகளான முனிவர்கள் சித்தர்கள், பிராம்மணோத்தமர்கள், வேத பாராயணம் பண்ண, ச்வேத த்வீப வாசிகளும், கந்தர்வ, யக்ஷ, சித்த, வித்தியாதர கணங்களும் கானத்துடன் "ஜிதந்தே" முதலான ஸ்தோத்திரங்களினால் துதிக்க, தும்புருவும், நாரதரும் ஸாம கானத்தை வீணாகானத்தில் மீட்ட, அளவற்ற குதூகலத்தையுடைய மஹா வராஹ மூர்த்தியானவர் தன் வியர்வை ஜலத்தினால் நித்ய புஷ்கரிணியை நிர்மாணித்து, அப்புஷ்கரிணியின் தென் கிழக்குப் பாகத்திலிருந்த அரசமரத்தின் கீழே அமர்ந்தார்.

அவ்வமயம் ஸர்வ லோக மாதாவான பூமி பிராட்டி, வராஹ மூர்த்தியை, நமஸ்கரித்து, "ஜிதந்தே" ஸ்தோத்திரத்தினால் துதிக்க வராஹ மூர்த்தியும் பூமி தேவியை தனது இரண்டு கரங்களாலும் வாரி எடுத்து தனது இடது துடையில் அமர்த்திக் கொண்டு அவள் பால் அன்பு சொரிய, பெருமிதம் கொண்ட பூமிதேவி, வராஹ நயினாரைப் பார்த்து,'அஹம சிஷ்யாச தாஸீச,பக்தாச த்வயி மாதவ மத்க்ருதே ஸர்வ பூதானாம் லஹுபாயம் வதப்ரபோ' "நான் தங்களுக்கு பக்தையாகவும், தாஸியாகவும், சிஷ்யையாகவும் அமர்ந்திருக்கிறேன். என்னுடைய குழந்தைகளாகிய சேதனர்கள் நல்ல கதி அடைய ஒரு லகுவான உபாயம் திருவாய் மலர்ந்தருள வேணும்" என்று பிரார்த்திக்க வராஹ நயினாரும் புன்முறுவலுடன் "கேளாய் பூமிப் பிராட்டியே! நாம சங்கீர்த்தனம் செய்பவன், புஷ்பத்தைக் கொண்டு திருவடியில் அர்ச்சனை செய்பவன், சரணாகதி அஃதாவது யாவனொருவன் தன் யௌவனாவஸ்தையில் என்னுடைய விஸ்வரூபத்தை உள்ளபடி மனப்பூர்வமாக ஸ்மரிப்பவன் ஆகியோர்பால் நான் அன்பு கூர்ந்து அவனுடைய அந்திம காலத்தில், உடல் கல்போல் கட்டையாக அசைவற்று இருக்கும் தருணத்தில், நாம் அவனை ஸ்மரித்துப் பின்னர் நாமே அவனிருப்பிடம் சென்று அவனை கைலாகு கொடுத்து நம் மேல்வீட்டிற்கு அழைத்துச் செல்லுவோம் காண்." என்று மூன்று பரம சுலபமான உபாயங்களை அருளிச் செய்தார். மேலும் "இந்த ஸ்ரீமுஷ்ண க்ஷேத்திரத்தில் உயிர் நீப்பவனுக்கு, மரண காலத்தில் கருட பகவான் சேதனனின் வலது செவியில் தாரக மந்திர உபதேசம் பண்ணி, ஆன்மாக்களை வைகுந்தம் அனுப்பக்கடவன்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

இரணியாக்ஷஸன் இறந்த பின்னர் அவன் மகள் ஜில்லிகை ஆறு மாதம் கர்ப்பமுற்றிருக்கையில், அவள் புருஷன் இறந்தான். ஜில்லிகை தனக்குப் பிறக்கும் குழந்தையைப் பற்றி அச்சமுற்று குல குருவான சுக்கிராச்சாரியாரிடம் முறையிட, அவர் திருமாலை வணங்கி வரம் பெறுமாறு யோசனைகூறினார். ஜில்லிகையும் வராஹப் பெருமானை நோக்கி தவம் செய்தாள். ஜில்லிகை செய்த தவத்தின் அக்னியானது, தேவர்களின் உலகையும் எட்டிற்று. இந்திரனும் தேவர்களும் இவள் எந்த குறிக்கோளுடன் தவம் செய்கின்றாளோ என்று அஞ்சி, தவமானது ஸ்ரீமந் நாராயணனைக் குறித்து செய்யப்படுவதால் சற்று தைரியத்தை அடைந்து, மற்ற தேவர்களுக்கு தைரியமூட்டி அவர்களையும் அழைத்துக் கொண்டு நேராக ஸத்ய லோகம் சென்று பிரமனைக் கண்டு அவரிடம் ப்ரார்த்தித்து, பிரம்மனின் யோசனைப்படிக்கு அவருடன் க்ஷீராப்திநாதனை "ஜிதந்தே" முதலான ஸ்தோத்திரங்களினால் ப்ரார்த்தித்தார்கள். ஸ்ரீமந் நாராயணனும் பிரத்தியக்ஷமாக, தங்களது விண்ணப்பங்களைத் தெரிவித்தார்கள். "தேவரீர்கள் கூடியவிரைவில் ஜில்லிகையின் கோரிக்கையைத்தலைக்கட்டி வைக்க வேணும்" என்று ப்ரார்த்திக்க ஸ்ரீமந் நாராயணனும் தேவர்களுக்கு அபயமளித்து அந்தர்த்தனமானார். பிரம்மனும், இந்திராதி தேவர்களும் மிகுந்த மன நிறைவுடன் தத்தமது இருப்பிடங்களுக்குச் சென்றனர்.



ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீயக்ஞ வராஹர்—திருமஞ்சனத் திருக்கோலம்.

ஜில்லிகையின் மனம் சலியாத தவத்தைக் கண்டு மகிழ்ந்த ஸ்ரீமந் நாராயணன் ஞான வராஹ ரூபியாய் அவள் முன் தோன்றினார். ஜில்லிகையும் கோடி சூர்ய பிரகாசமாய்த் தோன்றிய ஞான வராஹ ரூபியை சேவித்து பேரானந்தம் கொண்டவளாய், தன் கருவிலிருக்கும் சிசுவை ரக்ஷிக்க வேணும் என்றும், தன் மகனுக்கு திருமாலால் எவ்வித ஆபத்தும வரக்கூடாதென்றும, அவன் உடலிலிருந்து ஒருதுளி குருதி சிந்தினாலும், சிந்திய குருதியிலிருந்து ஆயிரக்கணக்கான பலம் பொருந்திய தன் மகனுக்கு சமானமானவர்கள் தோன்ற வேண்டும் என்றும், மகன் அஷ்டமா சித்தி பெற்று எக்காலத்திலும் சாகா வரம் வேண்டும் என்றும் வேண்டினாள். ஞானப்பிரானும் "உன் மனம்போல் வரம் தந்தேன்.

ஆனால் தேவர்களைப் பகைத்தானே யாகில் என்னால் கொல்லப்படு வான்.'' என்று கூறிவிட்டு மறைந் தார். ஜில்லிகையும் மனம் மகிழ்ந்து தன் நாடு திரும்பினாள். பின்னர் சில மாதங்கள் கடந்த பிறகு, ஜில் லிகை அழகான ஆண் மகவை ஈன் றாள். மகனுக்கு தண்டகன் என்று பெயர் சூட்டினார் குல குருவான சுக்கிராச்சாரியார். தண்டகனும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தான. குல குருவான சுக்கிராச்சாரியாரிடம் கலைகள் எல்லாம் கற்றுத் தேர்ந் தான். தண்டகன் முடி சூட்டிக் கொண்டதும் தன் அரசவைக்கு ஸ்ரீவைஷ்ணவர்களான ரிஷி ச்ரேஷ் டர்களையும், சித்த தவயோகிகளையும் எழுந்தருளச் செய்து அவர்களை விசேஷமாகப் பூஜித்தும், விசேஷ மாகக் கௌரவித்தும், நாடோறும் ஸ்ரீவைஷ்ணவர்களான ரிஷி ச்ரேஷ் டர்களின் திருவடிகளை சோதித்து பரம பாவனமான கங்கைக்கு ஒப் பானதுமான ஸ்ரீபாத தீர்த்தத்தை ஸ்வீகரித்தும், விசேஷ விஷ்ணு பக்த னாய், பரம பாகவதோத்தமனாய் அர சாண்டு வந்தான். தினமும் அன்ன தானங்கள் செய்தும், இராஜ்ஜியத் தில் ஆங்காங்கே பல தர்மங்கள் நடக்கும் படிக்கும் ஆக்ஞாபித்து, மக்களிடம் அதிகமான அன்பு கொண்டவனாய் சுகமாக அரசாண்டு வருகையில், இந்தச் செயல்கள் இதர அசுரர்களுக்குப் பொறுக் காமல், தேவதைகளைப் பற்றியும், இந்திராதி தேவர்களைப் பற்றியும் இவனிடம் சில விஷமத்தனமான கோட்களைச்சொல்லி, அவன்மனதை மெதுவே திரித்து தேவர்களுடன் சண்டை செய்ய ஆயத்தமாகும்படி செய்து விட்டார்கள்.

தண்டகனும் இந்திரலோகம் சென்று இந்திரனை வீம்பாக சண் டைக்கு அறை கூவி அழைத்தான். இந்திரனும் மஹா கோபம் கொண்டு தண்டகனோடு சண்டைக்கு ஆயத்த மாகி போர் துவங்கப்பட்டு ஏழுநாட் கள் நடந்த போரில் தண்டகனால் அடி பட்டுஇந்திரன் மூர்ச்சையானான்.இந் திரனோடு வந்த தேவர்கள் எல்லோ ரும் சிதறி ஓடிவிட்டனர். தண்டகன் வெற்றியுடன் தன்நாடு திரும்பினான். பின்னர் தேவர்கள் எல்லோரும் ஒன்று கூடி கலந்தாலோசித்து, பிர மனை முன்னிட்டுக் கொண்டு தேவர் கள் அனைவரும் ஒன்று கூடி, இந்திர னையும் மூர்ச்சை தெளிவித்து அவனை யும் அழைத்துக் கொண்டு க்ஷீராப்தி நாதனை "ஜிதந்தே'' ஸ்தோத்திரங்க ளினால் துதிக்க ஸ்ரீமந் நாராயணனும் பிரத்தியக்ஷமாகி, ஒரு சில உபாயங் களைத் தெரிவித்தார். அதன்படிக்கு அக்னி தேவன் அதிதி வேஷம் பூண்டு தண்டகனிடம் ஸ்ரீவைஷ்ணவனாகத் தோன்றி தனக்கு காட்டெருமை வேணும் என்று கேட்டவுடன், அதிதி ஸத்காரத்தில் பூரண நம் பிக்கைகொண்ட தண்டகனும் ஒப்புக் கொண்டு, காட்டுக்கு வேட்டை யாடச் சென்றான். அங்கே இந்திரன் வேடனைப் போல் வேடமிட்டுக் கொண்டு, காட்டிலிருந்த காட்டெரு மையை துரத்தலானான். அவ்வமயம் வந்த தண்டகனும் அம்பு எய்தினான் வேடனும் அம்புஎய்தினான். எருமை யும் இறந்தது. வேடனாகி வந்த இந்திரன் எருமை தனக்கென வாதா டினான். கோபம் கொண்ட தண்ட கன் வேடனைக் கொல்ல அம்பு எய்தி னான். இந்திரனும் தனது வஜ்ஜிரா யுதத்தினால் அம்பைத்தடுத்து தண்ட கனின் மண்டையில் ஓங்கி அடிக்க இரத்தத்துளிகள் பீறிட்டு வர, பல கோடி தண்டகர்கள் தோன்றி இந்தி ரனைத் துரத்தியடித்தார்கள். இந்திர னும் ஸ்ரீமந் நாராயணனை 'சரணாகதி' அடைய, ஸ்ரீமந் நாராயணனும் ஸ்வேத வராஹமாய் கோடி சூர்ய பிரகாசமாய்த் தோன்றி, தன் முகத் திலிருந்து எழுந்த கோரக் காற்றி னாலும், கண்களிலிருந்து பறந்துவந்த கனலினாலும் தண்டகர்களை அழித் தார். ஜில்லிகை தன் மகன் இறந் ததைக் கேட்டு கதறி அழுது ஸ்ரீபூவ ராஹப் பெருமானைக் குறித்து ஸ்தோத்திரம் செய்தாள். ஸ்ரீ பூவ ராஹப் பெருமானும் இவள் மேல் கருணை கூர்ந்து பிரத்தியக்ஷமாகி, இவளுக்கு ஞான விழி கொடுத்து ஸ்ரீவைகுண்டத்தில் இருக்கும் தண்ட கனைக் காண்பிக்க, அவளும் சந்தோ ஷப்பட்டு துயர் தீர்ந்து இராச்சியங் களை கவனித்துக் கொண்டிருந்து விட்டு பின்னர் தனக்கும் ஸ்ரீவைகுண்டப் பதவி வேணுமென்று தவம் கிடக்க, அவளுக்கும் அப்பதவி கிட்டிற்று.

(தொடரும்)



பேலூர், ஸ்ரீ சென்ன கேசவப்பெருமாள் கோயில்,
திரு. எஸ். ஜி. சேஷகிரி - கோவை.

22-ம் பக்கத் தொடர்ச்சி)

" மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்
கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்
கொடுத்தாரே! "

மணிமேகலைக்கு அமுதசுரபி கிடைக்கிறது அதனுள் ஒருமுறை உணவிட்டு நிறைத்து விட்டால், அந்த உணவை எடுக்க எடுக்க வந்து கொண்டே இருக்கும். அத்தகைய பாத்திரத்தில் முதன் முதலாக யாரிடம் உணவு பெறுவது என்று எண்ணிப் பார்க்கிறுள் மணிமேகலை. சாவகன் என்னும் வணிகனின் மனைவி ஆதிரை என்பவள் கையால் அந்தப் பாத்திரம் நிறைய உணவு பெற எண்ணி அவள் வீட்டிற்குச் செல்கிறுள். சென்று வாயிலில் பேசாமல் நிற்கிறுள்.

மணிமேகலை வந்து நிற்பதை அறிந்து ஆதிரை உணவு கொண்டு வந்து அமுதசுரபியில் நிறைய இடுகிறுள். அவள் அப்போது என்ன சொல்கிறுளாம்? "இந்த உலகம் முழுவதும் பசிப்பிணியானது அற்றுப் போக வேண்டும்" என்று சொல்லி, ஆருயிர் மருந்தாகிய உணவை இடுகிறுளாம்.

" பாரகம் அடங்கலும் பசிப்பிணி
அறுகென
ஆதிரை இட்டனள் ஆருயிர்
மருந்தென் "

பசியென்று வருவோர் யாராயிருப்பினும் அவர்க்கு உணவு இடுங்கள். அவர் இவர் என்று பார்க்காதீர்கள், பசி என்பது எல்லோர்க்கும் ஒன்று தான். எனவே அந்தப் பசியாற்றுவதில் வேற்றுமை பாராதீர்கள் என்கிறுர் திருமூலர்.

" ஆர்க்கும் இடுமின்! அவர் இவர்
எனனன்மின்! "

பசித்தவர்களின் முகத்தைப் பார்த்து இரக்கப்படுங்கள்! இரக்கப் பட்டு உணவிடுங்கள் என்கிறுர் பட்டினத்தார்.

" பசித்தோர் மூகம் பார் "

சாதிகள் இரண்டே இரண்டுதான். ஒன்று உயர்ந்த சாதி. இன்னென்று தாழ்ந்த சாதி. பிறர்க்குப் பசியாற உணவு கொடுத்தோர் உயர்ந்த சாதியினர். அவ்வாறு உணவு கொடுக்காதவர் தாழ்ந்த சாதியினரே என்கிறுர் ஔவையார்.

" இட்டார் பெரியோர், இடாதார்
இழிகுலத்தோர்! "

"வெயிலுக்கு ஒதுங்க வேண்டும் என்றல் நம்முடைய நிழலே நமக்கு உதவாது. நம்முடைய நிழலில் நாம் ஒதுங்க முடியாது. பிறருடைய-பிறிதொன்றினுடைய நிழலிலேதான் ஒதுங்க முடியும். அதுபோல் நம் கையில் உள்ள பொருள் நமக்கு உதவாது. நாம் போகின்ற காலத்தில் நம்முடன் வராது. ஆகவே கையில் பொருள் உள்ள போதே தானம் செய்யுங்கள். நொய்யைப் பிளந்தாற் போன்று சிறிதளவேனும் வறியவர்க்குக் கொடுத்து உண்ணுங்கள்" என்கிறுர் அருணகிரிநாதர்.

" நொய்யிற் பிளவளவேனும்
பகிர்ந்துண்மின்! "

இத்தகைய தானத்தால்-பிறர்பசி போக்கும் பணியால் பெறுகின்ற ஆற்றல் இருக்கின்றதே அது அளப்பரியது. தவத்தால் பெறுகின்ற ஆற்றலை விடத் தானத்தால் பெறுகின்ற ஆற்றலே முதன்மையானது.

தங்களுடைய பசியை உணவு அருந்தாமலே, தவவலிமையால் ஆற்றிக் கொள்பவரின் ஆற்றல் சிறந்தது தான்! ஆனுல், பிறருடைய பசிப் பிணியை, உணவு கொடுத்து ஆற்றுகின்றவரின் ஆற்றலோ அதனைவிடச் சிறந்தது என்கிறுர்.

" ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல்
அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின் "
(குறள் 226.)

●

---

(23-ம் பக்கத் தொடர்ச்சி)

நடந்திருக்கிறதே! இது ஈசுவரனின் திருவாய். அதனுல்தான் இப் பாசுரம் எடுப்பிலேயே 'வாய் அவனை அல்லது வாழ்த்தாது' என வாயின் பிரதாபம் பேசியது. அந்த அதிசய வாயினை நம்/வாய் வாழ்த்துமாக என்பது ஆழ்வார் கட்டளை.

பரமனின் உருவும் பெயரும் அடுத்துப் பேசப் பெறுகின்றன. எம் பெருமானின் எழில் உருவம் பார்த்து அனுபவிப்பதற்குரியது. திருநாமம் கேட்டு இன்புற வேண்டியது. ஆழ்வாரின் கண்கள் வேறு எதையும் பார்க்க மாட்டா. செவிகள் ஈசனின் பெயரல்லால் வேறு எதையும் கேட்க மாட்டா.

இங்கே, இன்னெரு குறிப்பும் நமக்குக் கிடைக்கும்.

ஆழ்வாரின் கண்கள் திருமாலை மட்டுமே பார்க்கும் என்பது புரிகிறது. வேறு ஏதும் கண் பார்வையில் எதிர்ப்பட்டால், ஆழ்வார் கண்களை மூடிக்கொள்ளலாம். ஏனெனில், இறைவனின் படைப்பிலேயே கண்களுக்கு இமைகள் உண்டு வேண்டாதவற்றைக் காண நேரிட்டால், மூடிக் கொள்ளலாம்.

செவிகளுக்கு மூடி ஒன்றும் வைக்கவில்லையே கடவுள். இதற்கு என் செய்வது?

ஈசனின் திருநாமத்தைவிட்டு, வேறு ஏதும் கேட்க நேர்ந்தால்? ஆழ்வார் இந்நிலைமைக்கு இடம் கொடுக்க மாட்டார். பரமன் புகழ் பேசப்படும் இடங்களில் மட்டுமே பொய்கையார் இருப்பார். ஈசனின் பெருமை உணராதவர்கள் நடுவே ஆழ்வார்க்கு என்ன வேலை? அவர் அத்தகைய இடங்களைத் தவிர்ப்பார் என்பது நமக்குத் தெளிவாகிறது!

(ஆம், இது ஏற்கெனவே திருமால் திருவாய் மலர்ந்தருளிய சுலோகத்தை நமக்கு மறைமுகமாக நினைவூட்டும்.)

மத்பக்தா: யத்ர காயந்தி
தத்ர திஷ்டாமி நாரத

அடியவர் பஜனை நடக்கும் இடத்தில் தாம் இருப்பதாக நாரதர்க்கு மகாவிஷ்ணு பத்ம புராணத்தில் கூறிய இடம் இது!

பொய்கையாழ்வார் போல நாமும் நம் வாய் - கை, கண் காதுகளைப் பழக்கி வைப்போமாக. ★



# ★ இராமாநுஜர் ★

## முன்னுரை :

ஸ்ரீவைஷ்ணவ சமயத்தின் ஆசாரியப் பெருமக்களில் மிகவும் தலை சிறந்த ஒருவராகத் திகழ்பவர் இராமாநுஜர் ஆவர். இவ் இருள் தரும் மாஞாலத்தைத் தெருள்தரும மாஞாலமாகச் செயதருளுவதற்காக இராமாநுஜர் திருவவதரித்து அருளினார். 'கலியும் கெடும் கண்டு கொள்மின்' என்ற நம்மாழ்வார் பாசுரத்தை மெய்ப்பிப்பதற்காகவே தோன்றியருளிய சான்றோர், இராமாநுஜர் எனல் பொருந்தும்.

## இதத்தாய் :

திருவாய்மொழி ஆயிரத்தையும் ஈன்றளித்த முதல் தாய் நமமாழ்வார் என்றால், அவற்றை உலகிற் பரப்பி வளர்த்துச் செழிப்பித்த இதத்தாய் இராமாநுஜரே எனப் பெரியோர்கள் இவரைப் புகழ்ந்து போற்றுவர். வைஷ்ணவ சமய வரலாற்றில் இராமாநுஜர் இணையற்ற பெருமையும் சிறப்பும் கொண்டவராவர்.

இவருக்கு முன்னர் 'பரம வைதிக சித்தாந்தம்' என்று வழங்கப்பெற்று வந்த வைஷ்ணவப் பெருஞ் சமயமானது, இவருக்குப் பின்னர், "எம்பெருமானார் தரிசனம்" என்று இவர் பெயராலேயே சிறப்பிதது வழங்கப் பெறுவதாயிற்று.

## அவதாரம் :

இராமாநுஜரைத் திருவனந்தாழ்வான் (ஆதிசேன்) அவதாரம் என்றும், விஷ்வக்சேனர் அவதாரம் என்றும் பெரியோர்கள் சிறப்பித்துரைப்பர். திருவரங்கத்தமுதனார், இவரைத் திருமாலின் திருக்கைகளிலுள்ள சுதர்சனம் என்னும் சக்கரம், பாஞ்சசன்யம் என்னும் சங்கு, நாந்தகம் என்னும் வாள், சார்ங்கம் என்னும் வில், கௌமோதகி என்னும் கதை ஆகிய ஐந்து படைகளின் அவதாரமாகப் புகழ்ந்து பாடிப் போற்றியிருக்கின்றார்.

அடையார் கமலத்து அலர்மகள்
கேள்வன், கையாழி என்னும
படையோடு, நாந்தகமும், படர்தண்டும்,
ஒண் சார்ங்க வில்லும்,
புடையார் புரிசங்கமும், இந்தப
பூதலம் காப்பதற் கென்று,
இடையே இராமாநுஜ முனி,
ஆயின இந் நிலத்தே.
(திருவரங்கத்து அமுதனார்)

## தோற்றம் :

இராமாநுஜர் தொண்ட நாட்டைச் சேர்ந்த ஸ்ரீ பெரும்பூதூரில் ஆசூரிகேசவப் பெருமாள் என்னும் தந்தையாருக்கும், பூமிப்பிராட்டியார் என்னும் தாயாருக்கும், சாலிவாகன சகம் 939-ல் பிங்கள ஆண்டு சித்திரைத் திங்கள், வளர்பிறை, பஞ்சமி திதி, திருவாதிரை நாள் கூடிய நல்லோரையில் தோன்றியருளினார்.


திரு. ந. ரா. முருகவேள், M A ,M.O L.
சென்னை-34


இவர்தம் தாய் மாமனாகிய பெரிய திருமலை நம்பிகள், இவருக்கு இளையாழ்வான் என்று பெயரிட்டார். இளையாழ்வான் என்பது இராமனுக்குத் தம்பி என்னும் பொருளில், இலக்குவனைக் குறிக்குமாதலின், இதுவே இராம அநுஜன (இராமாநுஜன்) எனவும் வழங்கும். அநுஜன் - பின் பிறந்தவன் (தம்பி).

இவருக்கு எதிராஜர், உடையவர், எம்பெருமானார் என்னும் வேறுபல சிறப்புப் பெயர்களும் உண்டு. இவர் இல்லறத்தைத் துறந்து துறவறம் மேற்கொண்டபோது, இவருக்கு 'எதிராஜர்' (துறவரசர்) என்னும் பெயர் அமைந்தது. இவர் திருவரங்கம் சென்றபோது, பெரிய பெருமாள் (ஸ்ரீ ரங்கநாதர்) தமது திருப்பொலிந்த சேவடியை இவர்தம் சென்னிமேல் பொறித்து, "உபய விபூதிச் செல்வத்தையும் உமக்கும் உம் உடையாருக்கும் தந்தோம், இனி நம்முடைய கோவிலைத் திருத்திப் பணிகொள்ளக் கடவீர்" என்று பணித்தருளினார். அன்று முதல் 'உடையவர்' என்னும் சிறப்புப் பெயர் இவருக்கு வழங்கத் தலைப் பட்டது.

"தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே" என்றபடி, திருவரங்கத்தில் இராமாநுஜர் பல சிறந்த ஏற்பாடுகளைச் செய்து வைத்தார். நாள்விழா, பட்ச விழா, மாத விழா, ஆண்டு விழா என்னும் வெவ்வேறு பலவகைச் சிறப்பு விழாக்கள், அங்கு எக்காலத்தும செம்மையாக நிகழும்படி செய்து வைத்தருளியவரும் இராமாநுஜரே யாவர்.

திருக்கோஷ்டியூர் நம்பிகள் பக்கல் 18 முறை திருவரங்கத்தினின்று விடாது தொடர்ந்து நடந்து சென்று, திருவெட்டெழுத்து (அஷ்டாட்சரம்) மந்திரம் உபதேசிக்கப் பெற்றார். நம்பிகள், அம்மந்திரத்தினை வேறு எவர்க்கும் உரைக்கலாகாது எனக் கட்டளையிட்டிருந்தும், உலகத்து உயிர்களின்மேற் கொண்ட பரிவு இரக்கத்தினால், அதனை அனைவருக்கும் வெளிப்படையாக எடுத்துரைத்து உபதேசம் செய்தருளினார். அஃதறிந்து திருக்கோஷ்டியூர் நம்பிகள், முதலில் சினங்கொண்டராயினும், இவர்தம் தூய திருவுள்ளத்தின் இயல்பினை உணர்ந்து வியந்து, 'எம்பெருமானார்' (எங்கள் எல்லோருக்கும் தலைவர்) என்ற சிறப்புப் பெயரை வழங்கியதுடன், இனி நம் ஸ்ரீ வைஷ்ணவ சமயம் இவர் பெயரால் "எம்பெருமானார் தரிசனம்" என்றே வழங்கக் கடவதாக! என்றும் பணித்தருளினார்.

## வேறு திருப்பெயர்கள்:

பிரம்ம சூத்திரத்திற்குப் போதாயன விருத்தியைத் தழுவி இவர் எழுதிய பாஷ்யத்தின் சிறப்பைக் கண்டு மகிழ்ந்த கலைமகள், இவருக்குப் 'பாஷ்யகாரர்' என்னும் சிறப்பை வழங்கியருளினாள்.

திருமாலிருஞ்சோலைப் பெருமாளுக்குத் தான் நேர்ந்து கொண்ட நூறுதடா வெண்ணெயும், அக்கார அடிசிலும் சமர்ப்பித்ததினால், ஸ்ரீ ஆண்டாளால் அர்ச்சகர் மூலமாக இவருக்கு 'நம் கோயில் அண்ணர்' என்னும் சிறப்புப் பெயர் வழங்கப் பெற்றது.

## யாதவப் பிரகாசரும், இராமாநுஜரும்:

இவர், தம் இளமைக் காலத்தில் ஸ்ரீபெரும்பூதூரினின்று கல்வியில் கரையிலாத காஞ்சிமாநகரம் சென்று, அங்கே பெருந்தேவித் தாயார் சமேத தேவராஜப் பெருமாள் கைங்கரியத்தில் ஈடுபட்டு வந்தார். அப்போது காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள திருப்புட்குழி என்னும் தலத்திலிருந்த, யாதவப் பிரகாசர் என்பவர் பால், சிலகாலம் வேத வேதாந்தங்களைப் பாடங் கேட்டு வந்தார். அப்போது அவ்வாசிரியர் சொல்லிவந்த பல பொருள்கள், இவருக்கு உடன்பாடின்றி மனத்துககுப் பொருந்தாமல், மாறுபாடாகவே தோன்றி வந்தன.

ஒரு சமயம யாதவப் பிரகாசர் "தஸ்ய யாத கப்யாஸம் புண்டரீக மேவ மக்ஷிணி" எனவரும் வேத வாக்கியம் ஒன்றுக்கு, "இறைவன் குரங்கின் பின்புறம் போன்ற சிவந்த கண்களை உடையவன்" என்று பொருள் கூறினார். அது கேட்டு இராமாநுஜர் அளவற்ற துக்கம் அடைந்தார். திருமகள் நாதனின் சிறந்த கண்களுக்கு உவமையாக, மிகவும் இழிந்த குரங்கின் பின்புறத்தையா கூறுவது? இது பெரும் அபசாரமல்லவா? என்று கருதிச் சிந்தை மிக நொந்தார். அதற்கு "இறைவன், சூரியனைக் கண்டு மலரும் செந்தாமரை மலரைப் போன்ற அழகிய சிவந்த கண்களை உடையவன்" என்பதே உரிய பொருத்தமான பொருளாகும் அன்றோ? எனப் பணிவுடன் விளக் கூறினார். யாதவப் பிரகாசர் அதனைக் கேட்டுச் சினமும் அழுக்காறும் கொண்டார். அதனால் இருவரும் பிரிய நேர்ந்தது.

## திருக்கச்சி நம்பிகள்:

பின்னர், இராமாநுஜர் தமது தாயாரின் கருத்தின்படி, காஞ்சிபுரத்தில் தேவராஜப் பெருமாள் கைங்கரியத்தில் ஈடுபட்டிருந்த திருக்கச்சி நம்பிகள் என்னும் பெரியவரை அடைந்து, அவர்பால் பக்தியுடன் பழகி வந்ததுடன், அவர் அருளிச் செய்தபடி சாலைக்கிணற்றினின்று நீர்கொணர்ந்து, நாள்தோறும் தேவப் பெருமாளுக்குக் கொடுத்துப் பணிவிடை புரிந்து வந்தார்.

ஒரு சமயம் இராமாநுஜரின் திருவுள்ளத்தில் சில நினைவுகள் ஐயங்களாக நிலவி வந்தன. அவற்றைப் பற்றித் தேவராஜப் பெருமாளின் திருவுள்ளக் கருத்து யாது? என்று அறிய விரும்பினார். தம் ஐயங்களுக்கு உரிய விடைகளைத் தேவப் பெருமாளிடம் கேட்டுத் தமக்குத் தெரிவிக்குமபடி, இவர் திருக்கச்சி நம்பிகளை வேண்டிக கொண்டார். அவரும் அங்ஙனமே, தேவப் பெருமாளிடம் விண்ணப்பித்துக் கொண்டார். அதற்குத் தேவப் பெருமாள் பின்வரும் ஆறு வார்த்தைகளைக் கூறியருளினார்.

பரத்துவப பொருள யாமே!
சித்து அசித்து ஈசுவரபேதமேதரிசனம்
உபாயம பிரபத்தியே
யாக்கையின முடிவில எமமை
நினைத்தல் வேண்டுமென்பதிலலை
யாக்கையின் முடிவில வீடுபேறு
இனையாழ்வான பெரியநம்பியின்
திருவடியைப் பற்றக் கடவன்.
என்பனவே அவையாகும.

## நூல்கள்:

இராமாநுஜர் நவநிதிகள போலவும், நவரத்தினங்கள் போலவும்,

ஒன்பது சிறந்த நூல்களை அருளிச் செய்தார். அவைகள் பின்வருமாறு:

1. ஸ்ரீ பாஷ்யம்
2. வேதாந்த தீபம்
3. வேதாந்த சாரம்
4. வேதாந்த சங்கிரகம்
5. கீதா பாஷ்யம்
6. சரணாகதி கத்தியம்
7. ஸ்ரீரங்கபாஷ்யம்
8. நித்யம்.

## பிரபந்த காயத்திரி:

திருவரங்கத்து அமுதனார் என்னும் வைணவப் பெரியார், இராமாநுஜரைப்போற்றித் துதித்து அருளிச் செய்த 'இராமாநுஜ நூற்றந்தாதி' என்னும் துதிநூல், பெரியோர்களால் பிரபந்த காயத்ரீ எனப் புகழ்ந்து துதிக்கப் பெற்று, திவ்வியப் பிரபந்தங்களில் ஒன்றாக சேர்க்கப்பட்டுள்ளது.

## பெருமை:

இராமாநுஜரின் பெருமை எல்லையற்றது. அது நிலத்தினும் பெரியது; கடலினும் ஆழ்ந்தது; வானினும் விரிந்தது. வைஷ்ணவ சமயத்தின் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் ஆகிய அனைவரின் சிறப்பும் பண்பு நலங்களும், இராமாநுஜர் பக்கல் ஒருங்கே திரண்டு ஓர் உருவாய் அமைந்திருந்தன.

இராமாநுஜர்க்கு நம்மாழ்வார் தலை; நாதமுனிகள் திருமுகம்; உய்யக் கொண்டார் கண்; மணக்கால் நம்பி கன்னம்; ஆளவந்தார் மார்பு; பெரிய நம்பி கழுத்து; திருக்கச்சி நம்பி கைகள்; திருக்கோட்டியூர் நம்பி நெஞ்சு; திருவரங்கப் பெருமாள் அரையர் வயிறு; திருமலையாண்டான் முதுகு; எம்பார் இடுப்பு; பட்டரும் நஞ்சியரும் பின்னிருக்கை நம்பிள்ளை தொடை; வடக்குத் திருவீதிப்பிள்ளை முழங்கால்; பிள்ளை லோகாசாரியார் திருவடி; திருவாய்மொழிப் பிள்ளை பாதரேகை; மணவாள மாமுனிகள் பாதுகை; சேனைபதி ஜீயர் ஊர்த்வ புண்டரம்; கூரத்தாழ்வான் புரிநூல்; முதலியாண்டான் திரிதண்டம்; வடுக நம்பி காஷாயம்; திருக்குருகைப் பிள்ளான் தோமாலிகை; பிள்ளை உறங்கா வில்லிதாசர் நிழல்; எனப் பெரியோர்கள் இவர்தம் பெருமையினை வியந்து கூறுவர்.

## முடிவுரை:

இங்ஙனம் ஆசாரியர்கள் எல்லோரையும தமக்கு உறுப்பாய்க் கொண்டு இணையற்ற பெருமையினராக விளங்குபவர் இராமாநுஜர்; இராமானுஜர் திருவடி வாழ்க! அவர் தம் புகழ் வாழ்க!

சேமநல் வீடும், பொருளும்,
தருமமும், சீரியநற்
காமமும், என்றிவை நான்குஎன்பர்;
நான்கினும் கண்ணனுக்கே
ஆம்அது காமம்; அறம்பொருள்வீடு,
இதற்கு என்று உரைத்தான்;
வாமனன சீலன் இராமாநுஜன்,
இந்த மண்மிசையே.

—திருவரங்கத்தமுதனார்.

★

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி
# நன்கொடை திட்டத்தின் கீழ் குடில்கள்

திருமலையில் யாத்திரிகர்களின் வசதியை மனதிற்கொண்டு, அங்கு மேலும் பல தங்கு வசதிகளை அமைத்துத்தர தி. தி. தேவஸ்தானம் முழு முயற்சியை மேற்கொண்டுள்ளது. இவ்வகையில், பக்தர்கள் மற்றும் பரந்தமனப்பான்மை கொண்ட யாத்திரிகர்களின் கூட்டு முயற்சியுடன் தன் நன்கொடை திட்டத்தின் கீழ் மேலாண்மை இம்முயற்சியில் இறங்கியுள்ளது.

யாத்திரிகர்களின் பயன் கருதி, பல்வேறு திட்டங்களின் விவரங்கள் கீழ்வருமாறு கொடுக்கப்பட்டுள்ளன.

## கருடாத்ரி நகர் குடில்கள் திட்டம்

இத்திட்டத்தின்கீழ் கட்டடத்தின் அடித்தளத்திலும், முதல் தளத்திலும் ஒவ்வொன்றும் 4 அறைத்தொகுதிகள் கொண்ட 16 குடில்கள் கட்டப்படும். ஒவ்வொரு அறைத்தொகுதியிலும் குளியலறை மற்றும் பொதுத் தாழ்வாரம் உள்ளடங்கிய 10 X 12 அடி என்ற அளவு கொண்ட அறை இருக்கும். 320 அடி சதுர அளவு கட்டட அறைகொண்ட ஒவ்வொருஅறைத்தொகுதிக்கான நன்கொடை ரூ. 30,000 மட்டுமே ஆகும்.

128 அறைத்தொகுதிகளில் 66 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே பக்தர்கள் அளித்து விட்டார்கள்

8 அறைத்தொகுதிகளின் ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 2.4 இலட்சம் அல்லது 4 அறைத்தொகுதிகளுக்கு ரூ. 1.2 இலட்சம் அல்லது இரண்டு அறைத் தொகுதிகளுக்கு ரூ. 60,000/- என்ற வகையில் நன்கொடை அளிக்கலாம்:

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள் திட்டம்

கோயிலின் வடகிழக்கு திசையில் ராம் பகீச்சாவில் மூன்று விருந்தினர் விடுதிகள் கட்டுவதென்று முடிவுசெய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு விருந்தினர் விடுதியும் ஒவ்வொன்றும் 50 அறைத் தொகுதிகள் கொண்ட மூன்று தளங்களைக் கொண்டு விளங்கும். குளியலறை வசதியுடன் கூடிய 14 X 16 அடி அளவு கொண்ட அறைகளை ஒவ்வொரு அறைத்தொகுதியும் கொண்டு விளங்கும். 600 சதுர அடி கொண்ட இவை பொது தாழ்வாரம் ஒன்றினைக்கொண்டு விளங்கும். ஒவ்வொரு அறைத்தொகுக்கான நன்கொடை ரூ. 60,000/-ஆகும். மொத்தம் 450 அறைத்தொகுதிகளில், 37 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே வழங்கப்பட்டுள்ளன

## பயன்கள்

1. கட்டடத்தில், நன்கொடையாளர்களின் பெயர் பொறிக்கப்பட்டுள்ள கருங்கற் பலகை வைக்கப்படும்.
2. நன்கொடையாளர்கள் வருடத்தில் (ஜனவரி முதல் டிசம்பர் வரை) நன்கொடை அளிக்கப்பட்டுள்ள குடிலகளில் ஒரு தடவை தங்கும்போது 10 நாட்களுக்கு மிகாமல், 60 நாட்களுக்கு இலவசமாகத் தங்கலாம்.
3. குடில்கள் ஒதுக்கப்படும்போது, நன்கொடையாளர்களின் உறவினர்களுக்கு முதலிடம் கொடுக்கப்படும்.
4. நன்கொடையாளர்கள் கேட்கும்போது, அவர்கள் பெயரில் உள்ள குடில்கள் காலியாக இல்லாவிடில், அவர்களுக்கு வேறு தங்கு வசதிகள் செய்து தரப்படும்.

# ஐந்தும் - ஏழும்

1 ஸ்ரீ மகாவிஷ்ணு ஸ்ரீவைகுண்டத்தில் "பரத்வம" என்ற நிலையாலும், திருப்பாற்கடலில் 'வியூகம்' என்ற நிலையாலும், உலகப் பொருள் முழுவதிலும் "அந்தர் யாமித்தவம்" நிலையிலும், அவதார காலத்தில் "விபவம்" என்ற நிலையிலும், திவ்ய தேசங்களில் "அர்ச்சை" என்ற நிலையிலும் "ஐந்து" விதமாக சேவை சாதிக்கிறார்.

2 துவாபர யுகத்தில் பஞ்சபாண்டவர்களுக்குக் கண்ணன் எபபோதும் துணையிருந்தான்.

3 திருவல்லிக்கேணி திருத்தலத்தில் பார்த்தசாரதியாக, நரசிம்மனாக, ஸ்ரீரங்கநாதனாக, வரதனாக, ஸ்ரீராமனாக ஆகிய ஐந்துநிலைகளில் எம்பெருமான் நித்ய சேவை சாதித்து அருளுகிறார்.

4 திருக்கடன்மலை என்ற மகாபலி புரத்தில் அற்புதமான பஞ்சபாண்டவர்ரதம், பஞ்சபாணடவர் மண்டபம், பகீரதன் தவம், கோவர்த்தன மண்டபம், அர்ச்சுனதவம் ஆகிய ஐந்தும் நம்மைச் சரித்திர காலத்திற்கு அழைத்துச் செல்லும்.

5 திருநீர்மலையில் நீர்வண்ணன் நின்றான், இருந்தான், கிடநதான் போன்ற நிலைகளோடு, நீர்மலையாகி ஐந்தாகக் காட்சி அளிக கிறான்.

6 எம்பெருமான், பிராட்டிக்கு ஐந்து நாள் இரவில் சொல்லிய வழிபாட்டு முறைதான் "பஞசராத்ரம்" ஆகும்.

7 திருப்பாடகம் பாணடவ தூதப் பெருமாளை பூததத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார் மற்றும் திருமங்கையாழ்வார் போன்ற ஐந்து ஆழ்வார்கள் மங்களா சாஸனம் செயது அருளியுள்ளார்கள்.

8 பொய்கையாழ்வார், பேயாழ்வார் திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய ஐந்து ஆழவார்களும் சொன்ன வண்ணம் செய்த பெருமாளைப்பாடி புகழந்துள்ளார்கள்.

9 பவளவண்ணனின் திருக்கோவிலுக்கு, பிரம்மோத்சவத்தில் ஐந்தாம் திருநாளில் தேவப் பெருமாள் நாச்சியார் திருக்கோலத்தில் சேவை சாதிப்பது மிகப் பிரசித்தம் பெற்றது.

10 ஒப்பிலியப்பன் சன்னதியில் - நம்மாழ்வாருக்கு பகவான் பொன்னப்பனாக, மணியப்பனாக, முத்தப்பனாக, என்னப்பனாக, திருவிண்ணகரப்பனாக - ஐந்து நிலைகளைக் கொணடு சேவை சாதிக்கிறார்.

11 திருக்குறுங்குடி திருத்தலத்தில் - எம்பெருமான்-வைணவநம்பியாக, இருந்தநம்பியாக, பள்ளிகொண்ட நம்பியாக, திருப்பாற்கடல் நம்பியாக, மலைமேல் நம்பியாக ஐந்து வித திருக்கோலத்தில் சேவை சாதிக்கிறார்.

12 ஐந்து ஏக்கர் நிலப்பரப்பில், ஐந்து நிலை கோபுரம் கொண்ட ஐந்து பிரகாரங்களைக் கொண்ட திருக்குறுங்குடி தலத்தில் பிரம்ம உற்சவத்தில் ஐந்தாம் நாள் திருநாளில் ஐந்து கருடசேவை கண் கொள்ளாக் காட்சியாகும்.

13 இடைக் காலத்து ஆழ்வார்கள் மொத்தம் ஐந்து ஆகும்.

14 திருவரங்கம், ஸ்ரீரங்கபட்டினம், அப்பக்குடத்தான் சன்னதி, திருக்

திரு. எம். எஸ். பிச்சுமணி
சென்னை-56.

## திருப்பதியில் தங்கு வசதி காட்டேஜுகளின் கட்டண விவரங்கள் (நாள் ஒன்றிறகு)

ஸ்ரீவேங்கடேஸ்வரா தர்ம சததிரம் :

| | |
|---|---|
| இரண்டு படுக்கைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 20-00 |
| நான்கு படுக்கைகளைக கொண்டு மேசை நாற காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 25-00 |
| ஒரு படுக்கையும், மேசை நாற்காலி வசதிகளைக கொண்ட அறை: | ரூ. 15-00 |

ஸ்ரீ பத்மாவதி விருந்தினா விடுதி :

| | |
|---|---|
| இரண்டு படுக்கைகளையும, குளிர்ச்சாதனம், மேசைநாற்காலி வசதிகளைக கொணட அறை. | ரூ: 50-00 |
| ஒரு படுக்கையும் குளிர்ச்சாதனம் மற்றும் மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ 30-00 |

ஸ்ரீ வேஙகடேஸ்வரா விருந்தினர் விடுதி :

| | |
|---|---|
| இரண்டு படுக்கைகளைக் கொணடு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 20-00 |

குடந்தை, திருவிந்தளூர் ஆகிய ஐந்தும் காவேரிக்கரையில் அமைந்த "பஞ்சரங்கங்கள்" ஆகும்.

15 ஸ்ரீவைணவர்களின் திருவிலட்சிணையை "பஞ்ச சமஸ்காரங்கள்" என்று சொல்லுவதுண்டு.

16 மகாவிஷ்ணு — மீன், ஆமை, பன்றி, சிங்கம் போன்ற நான்கு அவதாரங்களை எடுத்து விட்டார். இனிமேல் ஐந்தாவதாக கல்கி (குதிரை வடிவில்) அவதாரத்தை எடுக்கப்போகிறார் இவை ஐந்தும் மிருக இனத்தில் சேரும் உருவங்களாகும்.

17 கஸ்தூரி ரங்கன்-காவேரி ரங்கன் பரிமள ரங்கன்-கல்யாண ரங்கன்-ஹேமரங்கன் ஆகிய ஐந்து திரு மேனிகளும் காவேரிக் கரையில் அமர்ந்த நிலைகளாகும்.

18 பூர்வ காலத்தில் திருமழிசை திருத்தலத்தில் "பஞ்ச தலங்கள்" அமைந்திருந்தன.

19 ஸ்ரீவைணவ சம்பிரதாயத்திற்கு வெங்காயம், முள்ளங்கி, முருங்கைக்காய், வெள்ளைப்பூண்டு, வெள்ளைக் கததரிககாய் ஆகிய ஐந்தும் உகந்தது அல்ல.

20 உத்திரமேரூர் திருத்தலத்தில் பஞ்சபாண்டவர்கள் பிரதிஷ்டை செய்த பஞ்சவரதாகள் இன்றும் காட்சியளிக்கிறார்கள். "பஞ்ச வரத க்ஷேத்திரம்" என்றும் வழங்கி வருகிறது.

21 பகவான் படைத்தல் - காத்தல்-அழித்தல், அருளல், மறைத்தல் ஆகிய ஐந்து தொழில்களையும் செய்தருளுகிறார்.

22 பன்ஹாஜி என்ற வைணவ பக்தர் ஒருவருக்கு வடதேசத்து மோகாபூர் அரசன பஜனைப் பாடல்கள் பாடியமைக்காக ஐந்து கிராமங்களை தானமா கொடுத்து பெருமை சேர்ந்தான்.

23 சாந்தம்- தாஸ்யம் - சக்யம் - வாத்சல்யம்-மதுரபக்தி யாவும் சேர்ந்த ஐந்தும் பகவான் விரும்பும் பக்தியாகும்.

24 ஏழு பிரகாரஙகளைச் கொண்ட திருத்தலம் ஸ்ரீரங்கம்.

25 ஏழு மலைகளைக் கொண்ட திருத்தலம் திருப்பதி.

26 ஏழு முக்தி தரும் திருத்தலங்களில் ஒன்று காஞ்சிபுரம்.

27 ஸ்ரீராமபிரான் ஏழாவது திருநட்சத்திரமாக ஏழாவது அவதாரத்தை மேற்கொண்டான்.

28 ஈரேழு (2 X 7) ஆண்டுகளில் ஏழு சகோதரர்களைப் பெற்றான் ஸ்ரீராமபிரான்.

29 இராவணனோடு ஏழு நாட்கள் யுத்தம் செய்து ஸ்ரீசீதா தேவியை ஸ்ரீராமபிரான் மீட்டான்.

30 சுக்ரீவனுக்குத் தன் வல்லமையைக் காட்ட ஏழு மரங்களை ஒரே பாணத்தில் துளைத்துககாட்டினான்

31 ஏழு ரிஷிகள் சேர்ந்து "சப்த ரிஷி" இராமாயணத்தை உருவாககினார்கள்.

32 ஏழு காண்டஙகளைக் கொண்டது இராமாயணம்.

33 விவாஹகாலத்தில் "ஸப்த ரிஷி" முக்கிய சடங்காகும்.

34 ஸப்த ரிஷிகளே, ஏழு கிரஹங்களாக உருப்பெற்றார்கள்.

35 ஏழு ஜன்மம் எடுத்தாலும் ஐந்து நிலைகளில் சேவை சாதிககும் பரந்தாமனைப் பணிய வேண்டும்.



## தி. தி. தேவஸ்தான

## ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி கோயில், திருப்பதி.

### தினசரி நிகழ்ச்சி நிரல்

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | சுப்ரபாதம |
| 5-30 | முதல் | 9-30 | வரை | ஸர்வ தரிசனம் |
| 9-30 | ,, | 10-30 | ,, | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 10-30 | ,, | 10-45 | ,, | முதல் மணி |
| 10-45 | ,, | 11-30 | ,, | ஸர்வ தரிசனம |
| 11-30 | ,, | 11-45 | ,, | இரண்டாவது மணி |
| 11-45 | ,, | 4-00 | (மாலை) | ஸர்வ தரிசனம |
| 4-00 | முதல் | 4-30 | வரை | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 4-30 | ,, | 5-30 | ,, | ஸகஸ்ரநாம அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 5-30 | ,, | 5-45 | ,, | இரவு மணி |
| 5-45 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம |
| 6-15 | ,, | 6-45 | ,, | தீபாராதனை |
| 8-00 | முதல் | 8-15 | வரை | ஏகாந்த சேவை |

| ஆர்ஜித சேவைகள் | கட்டணம் | நேரம் |
|---|---|---|
| 1. அபிஷேகம | ரு. 1/- நபர் ஒருவரிக்கு | காலை 9-30 முதல் 10-00 வரை |
| 2. ஸகஸ்ரநாம அர்ச்சனை | ரு. 1/- நபர் ஒருவர்க்கு | மாலை 5-00 முதல் 6-00 வரை |

### பிரஸாத கட்டண விவரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1) | புளியோதரை | — | ரு. 50-00 |
| 2) | பொங்கல் | — | ரு. 55-00 |
| 3) | தத்யோதனம் | — | ரு. 40-00 |
| 4) | சர்க்கரைப் பொங்கல் | | ரு. 65-00 |
| 5) | தோசை | — | ரு. 35-00 |
| 6) | ஸீரா | — | ரு. 155-00 |
| 7) | கேஸரீபாத் | — | ரு. 85-00 |

# வைணவ விநு - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

**மகாபாரதத்தின் சிறபபென்ன?**

இது ஒரு உலகம போற்றும நூல். இதற்கு ஜயம, பாரத ஸம்ஹிதை எனவும் பெயர்கள உணடு. இது வியாஸரால் எழுதப்பட்டது பல தடவை பலரால் எழுதப்பட்டுக கடைசியில் ஒன்ருகச் சேர்க்கப் பட்ட நூல் எனவும் கூறுவார்கள். பரத வமிசத் துதித்த மன்னர்களைப் பற்றிய கதையானதால் பாரதம் எனவும், அளவிலும் பெருமையிலும் மிகப் பெரியதாக இருப்பதால் மஹா பாரதம எனவும் இதற்குப் பெயர் ஏற்பட்டது. நம் இந்தியாவுக்கும் "பாரதம்" எனப் பெயர் ஏற்பட்டிருக்கிறது. முன்பு நம் நாட்டில மூன்று பரதர்கள் இருந்திருக்கிருர்கள். இவர்களில் ஒருவருடைய தொடர்பு இந நூலுக்கும் நம் பாரத தேசத்துக்கும் ஏற்பட்டுள்ளது. 'பக்தியுடன் பாகவதம் படி. பக்தி யுகதி இவைகளுடன் இராமாயணம் படி. ஆனல் பக்தி யுக்தி உட்பொருள் இவைகளுடன் பாரதம் படி' என்று சொல்லுவார்கள். பாரதததில் வரும் கதைகளில் உட்கருத்தைத் தான் நாம் கவனிக்க வேணடும். இதற்குப் "பூசல் பட்டோலை" என ஸ்ரீ வைணவ ஆசார்யர்கள் பெயர் குறிப்பிட்டனர். உலகப் புகழ் பெற்ற விஷ்ணு ஸஹஸ்ர நாமம், ஸ்ரீமத பகவத் கீதை, ஹரிவமிசம் எனபன இந்தப் பாரதத்தில் உள்ளன. ஒரு சிலர் பாரததததை வீட்டில் படிததால் குடும்பத் தகராறு வரும் என்பர். மற்றும சிலர் பர்வாக்களை முன்னும் பின்னும் மாற்றிப்படித்தால் கெடுதல இல்லை என்பர். உண்மையில வில்லிபுத்தூர் ஆழ்வார் கூறிய படிக்கு இடை இடையே பகவான் கணணன் கதைத் தொடர்புள்ள நூல் ஆனதால் இந்த நூல ஸர்வமங்களகரமான நூல் என்றே எடுத்துக்கொள்ள வேண்டும். வைசம்பாயனா ஜனமே ஜய மகாராஜவுக்குச் சொலனதாக நூலபோககு இருக்கும். இது இராமாயணத்துக்குப் பிற்பட்டது எனவும் கூறுவதுண்டு. இதில் ஒரு லக்ஷம செய்யுட்கள் உள்ளன எனவும், இரண்டு லக்ஷத்து நாறபதாயிரம செய்யுட்கள் உள்ளன எனவும் கூறுவார்கள். இதில் 18 பர்வாக்கள் உள்ளன. பர்வாககளுக்குள் சிறு பகுதியான உபபர்வாக்களும் உளளன. 2109 அத்யாயங்கள் உள்ளன. ஹரிவமிசம் என்ற புனிதப் பகுதி நூலின் அனுபந்தமாக அமைந்துள்ளது. இது சம்ஸ்கிருத நூல்களிலே அளவில் மிகவும் பெரியது. மஹா பாரதம் ஒரே சமயததில் எழுதப்பட்டதல்ல என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்து. கௌரவர்களுக்கும், பாண்டவர்களுக்கும் நடந்த போர் விவரம், பழங்கால உண்மைக்கதைகள், ஆக்யானங்கள், உபாக்யானங்கள் முதலியனவும், அறம், துப்பறிவு, கடமைகள், நீதிகள், அரசியல், உலக இயல், வேதாந்தம், வேதாந்த உரையாடல்கள் போன்ற பகுதிகளும் மறறும் சில அரிய பகுதிகளும் இந்நூலில் பொதுவாக அடங்கியுள்ளன. ஆக்யானம் என்ருல் காதால் கேட்ட கதை. உபாக்யானம் என்ருல் கண்ணுல் பார்த்த கதை எனவும் பொருள் உரைப்பதுணடு அல்லது பெரிய கதை சிறிய கதை எனவும் கூறுவதுண்டு. 12, 13 வது பர்வாக்களான 14 ஆயிரம் செய்யுட்கள், 11 ஆயிரம் செய்யுட்கள் அடங்கிய சாந்தி பர்வமும் ஆனுசாஸனிக பர்வமும் முதல் கதையுடன் முழுத் தொடர்பு கொண்டவை அல்ல. பீஷ்மர் தரும புத்திரருக்கு ராஜ தர்மம், வர்ணுசரம தர்மம், தான தர்மம, மோக்ஷ தர்மம், ஆபத் தர்மம், யதி தர்மம் போன்ற பல அரிய கருத்துக்களை உபதேச மூலமாகக் கூறியதாக இவை அமைந்திருக்கும். மூன்ருவதான வனபர்வாவில் சாங்க்ய சித்தாந்தம் பற்றிப் பேசப் படுகிறது. ஐந்தாவது பர்வாவில் விதுர நீதிகள் கூறப்படும். பீஷ்ம பர்வாவில் உலகப் புகழ் பெற்ற ஸ்ரீமத் பகவத் கீதை வருகிறது. இந்த நூல் முதலில் வியாசர் தனது ஆறு சிஷ்யர்களில் ஒருவரான வைசம்பாயனருக்கு உபதேசித்தார். பிறகு வைசம்பாயனர் ஜனமே ஜயருக்கு இந்த மஹா பாரதத்தை உபதேசித்தார். கடைசியில் நைமிசாரணியத்தில் சூத பௌராணிகர் மஹர்ஷிகளுக்கு எடுத்துரைத்தார் என்பர் ஆராயசசியாளர்கள். முதலில் 1 லக்ஷம செயயுட்களையும். இரணடாவது நிலையில 24 ஆயிரம் செயயுட்களையும், மூன்ருவது நிலையில் 8800 செய்யுட்களையும வியாசர் இயற்றிக் கடைசியில் ஒன்று சேர்ந்தார் எனவும் அல்லது உகிரசிரவஸ் எனபவர் 8800 செய்யுட்களையும் வியாசர் 24000 செய்யுட்களையும் மற்றும் பல ரிஷிகள் பல செய்யுட்களை இயற்றிக் கடைசியில் 2 லக்ஷத்து 40 ஆயிரம் செய்யுட்கள் கொண்ட ஒரு முழு நூலாக்கினர் என்றும்கூட கூறுகிருர்கள். வியாசர் இந்த மஹாபாரதத்தைப் பிள்ளையாரைக் கொணடு ஏடு படுத்தினர். ஒருவர் நிறுத்தாமல் சொல்ல வேண்டும். ஒருவர் நிறுத்தாமல் எழுத வேண்டும் என்ற ஒப்பந்தத்தின் அடிப்படை

யில் பிள்ளையார் சுருக்கெழுத்தாளர் போல் தன் தந்தத்தைக்கொண்டு மிக வேகவாக எழுதி வந்தார். அவருடைய வேகத்துக்கு ஒத்து வியாசரால் சொல்ல முடியவில்லை. கருத்தைப் புரிந்து கொணடே பிள்ளையார் வியாசர் கூறும் செய்யுட்களை எழுத வேண்டி இருந்ததால் வியாசர் இடை இடையே சிந்திப்பதற்காக எளிதில் கருத்து விளங்காத செய்யுளைச் சொல்லி வந்தார். அதற்கு ''வியாஸ கூடம் அல்லது வியாஸ குட்டு'' எனப் பெயர்.

பவிஷ்யத் புராணம், மத்ஸ்ய புராணம், விஷ்ணு புராணம், மார்ககண்டேய புராணம் என்ற புராணங்களில் மஹா பாரதத்தின் சிறப்பு கூறப்பட்டுள்ளது. இதில் வேத சாரமான கருத்துக்கள் அடைத்திருப்பதால் இதனை ''பாரத: பஞ்சமோவேத:'' என்றபடி ஐநதாவது வேதம் எனவும் அழைப்பர். நான்கு வேதங்களின் சாரம் கொண்டது எனப் பொருள். 'இந்நூலில் கூறப்பட்டகருத்துக்கள் எங்கும்உள்ளன. இங்கு இல்லாத கருத்துக்கள் எங்கும் இல்லை' எனவும் புகழ்வதுண்டு. அனுசாஸன பர்வாவில் பீஷ்மருக்கும் தருமருக்கும் நடக்கும் உரையாடலில் பீஷ்மரால் வெளியிடப்பட்ட ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தை மிகவும் அருள் நூலாகப் பெரியோர்கள் கொண்டாடுவார்கள். விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தைப் படித்தால் ஸர்வ லாபம ஏற்படும் எனக் கூறுத நூல்களே இல்லை. ஆயுர் வேதாசார்யரான சரகர், ஆயுர வேத நூலில் ''விஷ்ணும் ஸஹஸ்ர மூர்த்தானம் சராசர பதிம் விபும் | ஸ்துவந் நாம ஸஹஸ்ரேண ஜ்வரான் ஸர்வான் வ்யபோஹதி ||'' என்றுர்.

அதாவது விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தை தினப்படி படித்தால் போதும், ஜ்வரம் மற்றும் தீராத கர்ம வியாதிகளும உடனே போகும் என்றுர். ஒரு சமயம் பாரதம் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது வைசம்பாயனர் ஜனமே ஜயரிடம் ''அரசனே, உமக்கு இவ்வுலகில் எது முக்கியத் தேவை'' என்றுர். அதற்கு ஜனமேஜயன் ''எனக்கு ஒன்றும் தேவையே இல்லை. ஆனல் தாங்கள் இந்த ஒப்பற்ற பராதத்தைச் சொல்லிக் கொணடே இருக்க வேண்டும். நான் கேட்டுக் கொண்டே இருக்க வேணடும். இதைப் பிரம்மானந்த இன்பமாக நினைக்கிறேன்'' என்றுராம். இக்கருத்து திருப்பாவை உரையில் வருகிறது. இவ்வாறு மஹாபாரதத்தின் சிறப்பினை எழுதிமாளாது இது ஒரு கருத்துக களஞ்சியம். அறிவுச் சுரங்கம். நம் நாட்டிற்குப் பாரதம் எனப் பெயர். இந்நூலுக்கும் பாரதம் எனப் பெயர். இதனல், உலக அரங்கில் தனக்கே தான் நிகரற்று பிரகாசிக்கும் பாரத நாடே பாரதமாகும்; மஹா பாரதமே பாரத நாடாகும் எனச் சுருக்கமாக முடிக கலாம். இம்மஹா பாரதத்தைத் தழுவி எழுநத பெருந்தேவனுர் பாரதமும் வில்லிப்புத்தூரார் பாரதமும் தமிழில் சிறப்பானவை.

(தொடரும்)

# ஸ்ரீராம வால்மீகி ஸமாகமம்

ஸ்ரீராமனின் பட்டாபிஷேகத்திற்குப் பிறகு பத்தாயிரம் வருஷங்கள் அயோத்தியில் சீதையுடன் ஸ்ரீராமன் உல்லாஸமாக வசித்து வந்ததாகவும் அதன்பிறகு வனத்தில் வால்மீகியின் ஆச்ரம ப்ரதேசத்திற்குச் சமீபத்தில் கொண்டு விடப்பட்ட சீதை மஹரிஷியின் ஆச்ரமத்தியில் தங்கியிருந்ததாகவும் அங்கு குசலவர்கள் ஜனித்ததாகவும் ஸ்ரீமத்ராமாயண உத்திர காண்ட சரித்திரத்தில் கூறப்பட்டுள்ளது. குசலவர்கள் மஹரிஷியின் சிஷ்யர்களாக வளர்ந்து வேத சாஸ்திரங்களை நன்றாகக் கற்றுணர்கிறார்கள்; அதன்பிறகு வால்மீகியை நாரத மஹரிஷி சந்தித்தபோது; நாரதர் வால்மீகிக்கு ஸ்ரீராமனின் சரித்திரத்தை சுருக்கமாக உபதேசித்து விட்டுச் செல்கிறார். பிரம்மாவும் உடனடியாக வால்மீகிக்கு ஸேவை தந்து அனுக்ரஹித்தபடி வால்மீகி பகவான் ஸ்ரீமத்ராமாயணத்தை இயற்றி அதை குசலவர்களுக்கு உபதேசித்து அவர்கள் ஸ்ரீராமனின் திருமுன்பு கானம் செய்து ராமாயணம் அரங்கேற்றப்படுகிறதென்பதை வால்மீகி பாலகாண்டத்தில் கூறியுள்ளார்.

இவ்வாறு இயற்றப்பட்டுள்ள காவயத்தில் ஸ்ரீராமன், சீதை, லக்ஷ்மணன் ஆகிய மூவரும வனவாசத்தை மேற்கொண்டு சித்ரகூடத்தை அடைந்த போது அங்கு வால்மீகி மஹரிஷியைச் சந்தித்து வணங்கியதாகவும், அவர்களை மஹரிஷி முறைப்படி உபசரித்ததாகவும், ஸ்ரீராமனின் அபிப்பிராயப்படி லக்ஷ்மணன் மஹரிஷியின் ஆச்ரமத்திற்குச் சமீபத்திலேயே ஒருபர்ணசாலையை அமைக்க அதில் மூவரும் சுகமாக வசித்து வந்ததாகவும் அயோத்யாகாண்டத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. முனிவரிடம் தங்களுடைய வரலாற்றைக் கூறியதாகவும் அதன் பிறகு பர்ணசாலை அமைக்கப்பட்டதாகவும் கூறப்படும் வால்மீகி ராமாயணத்தில், ராமனுக்கும் மஹரிஷிக்கும் ஏற்பட்டிருக்கக் கூடிய சம்பாஷணையைக் குறித்து வேறு விவரங்கள் ஏதும் காணப்படவில்லை. ஆனால், இந்த நிகழ்ச்சியை விளக்கி மிகவும் சுவையுள்ள விவரங்கள் அத்யாத்ம ராமாயணத்தில் காணப்படுகின்றன. அவற்றை அனுபவிப்போம்.

ஸ்ரீராமனின் பரத்வத்தையும் அதைப் பலர் அறிந்து அவரைத் துதிக்கும் விவரங்களையும் முதலிலிருந்தே பல வரலாறுகளில் விளக்கும் அத்யாத்ம ராமாயணம் வால்மீகி பகவானும் ஸ்ரீராமனின் பரத்வத்தை உணர்ந்து கொண்டு அவருடன் ஸல்லாபிப்பதாகக் கூறுகிறது.

சித்ர கூடத்தை மூவரும் அடைந்ததும், வால்மீகி பகவானின் ஆச்ரமத்திற்குச் செல்கிறார்கள். முனிவரை மூவரும் நமஸ்கரித்ததும், அவர் ஸ்ரீராமனை விச்வாஸத்துடன் அணைத்துக் கொண்டு ஆசனத்திலிருத்தி பக்தியுடன் முறைப்படி பூஜித்து சர்வ உபசாரமும் செய்து கந்த மூலாதிகளை மூவருக்கும் அளித்து போஜனம் செய்வித்து ஆனந்திக்கிறார்.

ஸ்ரீராமன் முனிவரிடம் அவர்கள் மூவரும் அயோத்தியை விட்டு வர நேர்ந்த சந்தர்ப்பங்களை விளக்கி, அவர்கள் சில காலம் சித்ரகூடத்தில் வஸிப்பதற்குத் தக்கதான ஒரு ஸ்தலத்தை அறிவிக்கும்படி முனிவரைப் பிரார்த்திக்கிறார்;

வால்மீகி புன்சிரிப்புடன் ஸ்ரீராமனைப் பார்த்து,

"நீர் எல்லா உலகத்தினருக்கும் உத்தமமான வாசஸ்தலமாக உள்ளீர். அப்படிப்பட்ட நீர் உமக்கு ஒரு வாசஸ்தலத்தைக் கூறும்படி என்னைக் கேட்டபடியால் விவரமாகக் கூறுகிறேன், கேட்பீராக" என்று தொடங்கி,

1. சாந்த குணமுள்ளவர்களும் சமதர்சிகளும் பூத தயையுள்ளவர்களும், உம்மையே எப்போதும் தியானித்திருப்பவர்களுமான யோகிகளின் ஹ்ருதயம் உமக்கு ஏற்ற கிருஹமாகிறது.

2. தர்மாதர்மங்களில் பற்றை அறவே நீக்கி உம்மையும் சீதையையும் சதா சர்வகாலம் பஜிப்பவர்களுடைய ஹ்ருதயம் நீர் வசிக்கும் ஸ்தலமாகிறது.

3. ஆசையை அறவே நீக்கி உம் சரணமே கதி எனப்படுவனுடைய ஹ்ருதயம் உமக்குச் சுகமான கிருஹமாகிறது.

---

சுகி

---

4. எவர்கள் ராகம், த்வேஷம், லோபம், மோகம், மதம், மாத்ஸர்யம், சரியை, அசூயை, டம்பம், தர்ப்பம், அஹங்காரம் முதலியவற்றை நீக்கி இச்சை, பக்தி, சிரத்தை ஆகியவைகளே கொள்ளத்தக்கதென்று கண்டு உம்மிடத்திலேயே பக்தி பண்ணி பொன்னையும் ஓட்டாஞ் சல்லியையும் ஒத்ததாகக் கொண்டு வசிக்கிறார்களோ அவர்களுடைய ஹ்ருதயங்கள் உமக்கு கிருஹங்களாகின்றன.

(இச்சையாவது, அன்னபானாதிகளும், மலமூத்ர விஸர்ஜனாதிகளும், தேஹதர்மத்தை, அனுசரித்தவை என்ற தீர்மானத்துடன் அவற்றின்மீது சாஸ்திர விஹிதமாக ஏற்படும் சித்த வ்ருத்தியாகும். பகானிடத்தில் வைக்கப்படும் பிரியமே பக்தி. ஆசாரியனிடத்திலும் வேதத்திலும் அதை அனுசரித்த சாஸ்திரங்களிலும் வைக்கும் ஈடுபாடு சித்த வருத்தி சிரத்தை எனப்படும்).

5. எவனொருவன் ஸத்கர்மாக்களைச் செய்து பலனை உமக்கு அர்ப்பணிக்கிறானோ அவனுடைய ஹ்ருதயம் உமக்குச் சுகமான வாசஸ்தலமாகும்.

# திருமலையில்

## தி. தி. தேவஸ்தான

# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| டி. பி. சி. | ரூ.25/- ரூ.15/- ரூ.10/- |
| டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| பெரியன | ரூ. 40/- |
| சிறியன | ரூ. 20/- |
| ஹில் வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 20/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| திருமணக் கூடம் (3வது சத்திரம்) | ரூ. 15/- |
| சிறப்பமைப்புகொண்ட காட்டேஜுகள் | ரூ. 75/- |
| டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |

**எஸ். வி. விருந்தினர் விடுதி,**

| | |
|---|---|
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடிபவன் | ரூ. 100/- |

**திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)**

| | |
|---|---|
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண்: 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண்: 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண்; 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண் : 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண் : 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள் பக்க காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி. பி. சி. ஒரு அறைத் தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

6. எவனொருவன் பிரியத்தைக் கண்டு சந்தோஷிக்காமலும் அப் பிரியத்தில் வருத்தமடையாமலும், யாவும் இயற்கை என்ற நிச்சய புத்தியுடன் உம்மை பஜிக்கிறனோ அவனுடைய மனம் உமக்கு மேன்மையான தங்குமிடமாகும்.

7. எவர்கள் சம்ஸார துக்கத்திலிருந்து விடுபட்டு, எல்லோருடைய ஹ்ருதயங்களிலும் வஸிப்பவரான உம்மை சாக்ஷாத்கரிக்கிறார்களோ, அவர்களுடைய ஹ்ருதயம் உமக்கேற்ற வாசஸ்தலமாகும்.

8. எவர்கள் எப்போதும் இடைவிடாமல் பிரம்ம வித்யையை அப்யஸித்து, உம்முடைய பாதார விந்தங்களைச் சேவிப்பதில் ஸ்திரமான அந்தக்கரணமுடையவர்களாக சதா உம்முடைய நாம சங்கீர்த்தனம் செய்து கொண்டு இருக்கிறார்களோ அவர்களுடைய ஹ்ருதயங்கள் உமக்குச் சுகமான கிருஹங்களாகும்''.

இவ்வாறு விவரித்த பிறகு, வால்மீகி பூர்வத்தில் தான் பிராமணனாகப் பிறந்து வேட ஜாதியில் வளர்ந்து அவதிப்பட்ட தருணத்தில் ஸப்த ரிஷிகளின் அனுக்ரஹத்தால் உபதேசம் பெற்று ஸ்ரீராமநாம உச்சாரண ப்ரபாவத்தால் சித்தியடைந்த வரலாற்றை ஸ்ரீராமனிடம் விவரமாக விண்ணப்பம் செய்கிறார். அதற்கு மேலாக, ஸ்ரீராமன், லக்ஷ்மணன், சீதை ஆகிய மூவரையும் அவர்களுடைய உண்மையான ஸ்வரூபத்தில் தான் தரிசிப்பதாக முனிவர் கூறி விட்டுப் பல சிஷ்யர்களுடன் அவர்கள் மூவரையும் அழைத்துக்கொண்டு சித்ரகூட பர்வதத்திற்கும், மந்தாகினி நதிக்கும் மத்தியில் ஒரு ஸ்தலத்தில் கிழக்கு மேற்கு வீதியில் தெற்கு நோக்கி நுழைவாயில் அமைக்கப்பட்ட இரண்டு பர்ணசாலைகளை ஏற்படுத்தியதாகவும், அவற்றில் ஸ்ரீராமன், லக்ஷ்மணன், சீதை ஆகிய மூவரும் ப்ரவேசித்து, முனிவர்கள் பூஜிக்க, தேவலோகத்தில் தேவேந்திரனைப் போல அங்கு சுகமாக வசித்து வந்ததாகவும் அத்யாத்ம ராமாயணத்தில் காணப்படுகிறது.



# ★ கீதை காட்டும் நல்வழி ★

தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம்

**அத்தியாயம்—16.**

**பகுதி—4.**

க்ஷமா : தன் மனத்துக்கு ஒவ்வாததைக் கூட முக மலர்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளும் பாங்கு பொறை அல்லது க்ஷமை ஆகும். பிறர் தன்னைத் தூற்றும்பொழுதும், துன்புறுத்தும்பொழுதும் பொறையுடையவன் சிறிதும் கலங்க மாட்டான். 'அகழ்வாரைத் தாங்கும் நிலம் போலத் தம்மை இகழ்வாரைப் பொறுத்தல் தலை' என்பது வள்ளுவர் வாக்கு. பிறர் சொல்லும் சிறு சிறு வார்த்தைகளால்கூட சினம் அடைந்து மனம் தடுமாறி சீற்றத்திற்கு ஆளாகி தன்னை மறந்து தகாதன செய்யத் துணிதல் கீழோரது இயல்பு. இத்தகையோர் வாழ்வில் முன்னுக்கு வர முடியாது. காரணம் எதற்கெடுத்தாலும் அவர்கள் நிலை தடுமாறி தங்கள் சக்தியைச் சிதறடித்து விடுகின்றனர். மாறாகச் சான்றோர்கள், பிறர் தங்களுக்குச் செய்யும் மாபாதகங்களைக் கூட பொறுமையுடன் ஏற்று அவர்களை மன்னித்து விடுகின்றனர். இது அவர்களது சீரிய நிலையை மேலும் உயர்த்துகிறது. பொறுமைக்காரன் ஒருவனால் ஏவப்பட்ட ஒரு கீழோன் மணிக்கணக்காக புத்த பெருமானிடம் சென்று, அவரைத் திட்டித் தீர்த்தான். பெருமானோ அதனால் கொஞ்சமும் நிலை மாறவில்லை. இறுதியில் அவரது பொறுமையால் மனம் மாறிய அந்தக் கீழோன் அவர் காலடியில் வீழ்ந்து அவரது பிரதம சீடனாக மாறினான்.

'பிறர் உங்களைக் கழுதை என்றோ நாய் என்றோ திட்டிவிட்டால் நீங்கள் ஏன் கோபம் கொள்கின்றீர்கள்? உங்களுக்கு உடனே நாலு கால்களும், ஒரு வாலும் முளைத்து விடுகின்றனவா? இல்லையே, எனவே அவர்கள் திட்டியது உங்களைக் குறிக்கவில்லை என்று தெளிந்து அமைதியோடிருங்கள். திட்டுதல் என்பது வெறும் காற்றில் எழும் ஒலி அலைகளே. அதனால் எவ்வித மனக் கலக்கமும் அடையாதீர்கள்' என்று இமய ஜோதி ஸ்ரீ சுவாமி சிவானந்தர் நம்மனைவரையும் கேட்டுக் கொள்கிறார்.

நம்மிடம் ஆற்றலும், ஆண்மையும் இருந்தும் பிறர் நம்மை இழிவுபடுத்தும்பொழுது அதனால் நிலை குலையாது. அமைதியோடிருத்தல் க்ஷமை அல்லது பொறை ஆகிறது.

த்ருதி: எத்தனை நதிகள் பெரும் பிரவாகமாகப் பாய்ந்து வந்தாலும் அவை அனைத்தையும் கடல் அமைதியாகத் தன்னுள் ஏற்றுக் கொள்வது போல மகான் பிறர் தமக்கு இழைக்கும் இன்னல்களை அமைதியுடன் ஏற்றுக்கொள்கிறார். அனைத்துயிர்களும் இறை சொரூபமே என்ற எண்ணத்தில் அவர் யாண்டும் உறுதியாக இருப்பதால் அவர் எதனாலும் நிலை குலைவதில்லை. இந்த உறுதிதான் 'த்ருதி' எனப்படுகிறது. இலட்சியத்தில் குறியாயுள்ளவர்கள் எதிர்படும் இன்னல்களையும், இடையூறுகளையும் கண்டு கலங்க மாட்டார்கள். அகில உலகமே அவரை எதிர்த்தாலும், இறைவனை அவர் துணையாகக் கொண்டிருப்பதால் அவர் தனது நெறியிலிருந்தும், குறியிலிருந்தும் சிறிதும் பிறழமாட்டார்.

சௌசம்: இந்த இடத்தில் இது புறத்தூய்மை எனப் பொருள்படுகிறது. உடல் இறைவன் உறையும் புனித ஆலயமாகும். ஆலயத்தை எவ்வாறு தூய்மையின் இருப்பிடமாக வைத்துக் கொள்ள வேண்டுமோ அதுபோல உடலையும் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். விரதம், தவம், நோன்பு என்ற பெயரால் உடலை வாட்டி, வதைத்தல் நன்றன்று. அதை அளவுக்கு அதிகமாகப் போஷிக்கவும் கூடாது. 'சரீர மாத்யம் கலு தர்ம சாதனம்'-அறநெறியின் அடிப்படை உடலேயாம் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். தனது உணவு, உடை, வசிக்கும் இடம் போன்றவற்றில் சாதகன் தூய்மையைக் கடைப் பிடிக்க வேண்டும். ஆன்மீக வாழ்வில் முன்னேற ஆரோக்கியமான உடலே முதற்படியாகும். மனத்தின்கண் அழுக்காறு அவா, வெகுளி, இன்னாச் சொல் போன்றவை அண்ட விடாது பார்த்துக் கொள்ள வேண்டும்.

திரு. டி. கே. நாராயணன்,
M.S.c,. M.Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

அத்ரோஹம: பழிவாங்கும் தன்மை இன்மை என்பது இதன் பொருள். பிறர் தன்னை ஏசிவிட்டால் உடனே அவரைத் திருப்பி ஏசவும், பிறர் நம்மை அடித்து விட்டால் உடனே அவரைத் திருப்பி அடிக்கவும்தான் சாதாரண மனிதன் முற்படுவான். ஆனால் சாதனையில் முன்னேறியவர்கள் பிறர் தங்களை திட்டிய போதும், அடித்தபோதும் பொறுமையாக அதை ஏற்றுக் கொள்ளும் மனப்பாங்கைப் பெற்று விளங்குவர். இப்படி விளங்குதல் ஒரு தெய்வீக இயல்பாகும். இன்னா செய்தார்க்கும் இனியவை செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு என்னும் வள்ளுவர் வாக்கிற்கு விளக்கமாக சான்றோர் விளங்குவர்.

நாதிமானிதா: தற்புகழ்ச்சியின்மை.

தான் செய்த சிறு உதவிக்கும் பெருமளவில் தனக்குப் பாராட்டும், புகழும் கிட்ட வேண்டும் என்று எதிர்பார்ப்பது கீழோரது இயல்பு; மாறாக தாங்கள் பிறருக்கு முன் பின் தெரியாதவருக்குக் கூட மகத்தான உதவி செய்திருப்பினும் அதன் மூலம் கொஞ்சமும் பிறரிடமிருந்து பாராட்டையும், புகழ்ச்சியையும் மேலோர் எதிர்பார்க்க மாட்டார்கள். மாறாக பிறருக்கு உதவி செய்ய இறைவன் தங்களுக்கு அளித்த அரிய வாய்ப்பு அது என்று எண்ணி இறைவனுக்கு அவர்கள் மனமொப்ப நன்றி கூறுவர். இத்தகைய அடக்கம் அவர்களைத் தேவர்கள் நிலைக்கு உயர்த்தி விடும் என்கிறார் வள்ளுவர். ஊர் தோறும் பெரும், பெரும் ஆலயங்களைக் கட்டி வைத்து சிறிதளவு புகழையும், பெயரையும் விரும்பாது தங்கள் பெயரை எதிலும் குறிக்காது மறைந்து போன அன்றைய நமது முன்னோர்கள் எங்கே? இரண்டடி நீளத்தில் சன்னதியில் ஒரு குழாய் விளக்கைப் போட்டுவிட்டு அதன் வெளிச்சத்தையே மறைக்குமளவுக்கு தங்கள் பெயரைக் கொட்டை எழுத்தில் அதன்மீது பலரும் பார்க்கும்படியாக எழுதத் துடிக்கும் இன்றைய நம்மவர்கள் எங்கே? எல்லோருக்கும் பிறப்பு ஒரே மாதிரி, இறப்பும் ஒரே மாதிரி. எனவே இடை நடுவில் குறுக்கிடும் இந்தச் செல்வம், இந்தப் பதவி, இந்தப் புகழ் அனைத்தும் இறைவன் தந்த பிரஸாதம் என்று கருதி ஆணவமும், அஹங்காரமும் அற்று இருத்தலே மகான்கள் நமக்குக் கற்றுத் தந்த பாடமாகும்.

மேலே காணும் மூன்று சுலோகங்களில் ஆத்ம ஞானமும், மனத் தூய்மையும் வாய்க்கப் பெற்ற சான்றோரின் தெய்வீக குணங்கள் எடுத்துரைக்கப்பட்டன. இவை எல்லாம் செயற்கையாகஒருவரிடம் வருவிக்கப் பட்டவை அல்ல. இயற்கையாகவே அவர்களது மனத்தூய்மையின் காரணமாக அவை அவர்களிடம் வெளிப்படுகின்றன. இந்தக் குணங்கள் தங்களிடம் இருப்பது போல பண்படாத சிலர் காட்டிக் கொள்வார்களாகில், அது கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி தானும் தன் பொல்லாச் சிறகுகள் விரித்து ஆடியதை ஒக்கும்; அசல் எது, போலி எது, என்பதை மக்கள் எளிதில் உணர்ந்து கொள்வர்;

அடுத்த சுலோகத்தில் இதற்கு மாறாக உள்ள 'அசுர ஸம்பத்து' விளக்கப்படுகிறது.

தம்போ தர்போ அபிமானஸ்ச |
க்ரோத: பாருஷ்யமேவ ச |
அக்ஞானம் சாபி ஜாதஸ்ய
பார்த்த ஸம்பத மாஸுரீம் || 16-4 ||

'அர்ஜுனா! பகட்டு, இறுமாப்பு, தற்பெருமை, சினம், கடுமை, அக்ஞானம் யாவும் அஸுர ஸம்பத்தை கொண்டு பிறந்தவனுக்கு உண்டு!

தம்ப: பகட்டு.

தங்களிடம் இல்லாததை இருப்பதாகக் காட்டிக் கொள்ள நம்மில் பலர் விரும்புகிறோம். அழகு குன்றியுள்ளோர் ஒப்பனை மற்றும் நகைகள் மூலம் தங்களை அழகுள்ளவர்களாகவும், கல்வி அறிவில் குறைந்தவர்கள் தங்கள் கையில் ஒரு ஆங்கில நாவலை வைத்துக் கொண்டு தங்களுக்கு அதிகமான ஆங்கில அறிவு உள்ளதாக பிறர் கருத வேண்டும் எனவும், பதவியில் கீழே உள்ளோர் நல்ல எடுப்பான உடை அணிவதன் மூலம் பிறர் தங்களை உயர் பதவி வகிப்போர் என்று கருத வேண்டும என்றும் பொதுவாக எண்ணுவர். நம்முடைய வாழ்வைப் பொதுவாக ஆராய்ந்தால் பகட்டுக்காகவும் தற்பெருமைக்காகவும் நாம் நமது வாழ்வில் எவ்வளவு நேரத்தையும், பொருளையும் சீரழிக்கிறோம் என்பது புலப்படும். சமய வாழ்விலும் இத்தகைய போலியான பகட்டு வாழ்க்கை வாழ்பவர் பலர். பிறர் தங்களைப் பெரிய மதாபிமானிகளாக, சமயவாதிகளாகக் கருத வேண்டும் என்பதற்காக வெளி வேஷங்கள் எல்லாம் தரித்து, பலரும் பார்க்கும்படியாக கொஞ்சம் சில்லரைக் காசுகளை டொப்பென்று ஒலி எழும்படியாக பிச்சைக்காரனின் தட்டில் போடுபவர் பலர். வட்டிக்கு மேல் வட்டி வாங்கிக் கொண்டு, அந்தப் பாவத்தைப் போக்க வேண்டி அம்பிகையின் கோவிலை மணிக்கணக்காக வலம் வருவோரும் உண்டு. இந்தப் பகட்டு ஒரு அசுர குணம் என்கிறார் பகவான்.

(தொடரும்)

## அறிவிப்பு

திருமலையில் கல்யாணோற்சவம் போன்ற ஆர்ஜித சேவைகளுக்காக பக்தர்களால் எம்.ஓ. மூலம் அனுப்பப்படும் தொகையை தி. தி. தேவஸ்தானம் ஏற்றுக் கொண்டாலும், அம்முறை சில நிருவாக சிக்கல்களையும், கால தாமதத்தையும் ஏற்படுத்துவதால், பக்தர்கள், அனுப்ப வேண்டிய தொகையை டி. டி. (D. D.) மூலம் அனுப்பினால் மேலாண்மைக்கு அம்முறை உதவியாக அமையும். மேலும் ஆந்திரா வங்கி மற்றும் சில வங்கிகள் இது போன்று தி. தி. தேவஸ்தானத்தின் பெயரில் வழங்கப்படும் டி.டி.களுக்கு எவ்விதக் கட்டணமும் பெற்றுக் கொள்வதில்லை.

8-ம் பக்கத் தொடர்ச்சி

பக்தியைச் சிறப்பாகப் பாராட்டினவர்; எல்லாவற்றுக்கும் மேலாகப் பெரிய சமரசவாதி.

அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ் மிக விரிந்தது. அவர் பதினுறுயிரம் திருப்புகழ் பாடினுர் என்று மார்க்க சகாயதேவர் சொல்கிருர். அவை முழுவதும் இப்பொழுது கிடைக்கவில்லை. ஆயிரத்து முந்நூற்றுச் சொச்சம் பாடல்களே கிடைத்திருக்கின்றன; கிடைத்தவற்றை பார்த்தாலேயே அருணகிரிநாத சுவாமிகளின் சமரச மனேபாவம், விரிந்த உள்ளப்பாங்கு நன்கு தெரியும். அவர் தொடாத கதை இல்லை. பாடாத பொருள் இல்லை.

ஞான நெறியைப் பற்றிச் சில பாடல்களில் விரிவாகச் சொல்வார். யோகத்தின் முறைகளைச் சில பாட்டுக்களில் விரித்து உரைப்பார். முருகப் பெருமானின் அழகை அகக்கண் கொண்டு பார்த்த அனுபவத்தை இனிமையாக எடுத்துச் சொல்வார். அவன் தத்துவத்தைச் சொல்வார். வீரப் பிரதாப விளையாடல்களைப் பலப் பல பாட்டுக்களில் எடுத்து விரிப்பார்; அவன் கருணையின் பெருமையை, வள்ளி அம்மையின் இயல்பை, வள்ளியெம் பெருமாட்டி தினைப் புனம் காத்த மலைச் சாரலுக்கு ஓடி வந்து அவள்பால் முருகன் கொண்ட காதலின் சிறப்பை அருணகிரி நாத சுவாமிகள் சொல்வது போல யாராலும் சொல்ல முடியாது.

இவை மாத்திரமா? சிவ பெருமானின் கருணைச் செயல்கள் எல்லாம் அங்கே வரும். அப்பெருமானைப் பற்றிய நாமங்கள் எல்லாம் அருச்சனையாக விரிந்திருக்கும். திருமாலின் கருணையும், அவதாரக் கதைகளும், இராமபிரான் வரலாற்றின் பகுதிகளும், கண்ணபிரானின் கோலாகல விளையாடல்களும் அவர் பாடல்களில் ஆங்காங்கே காட்சி தரும். அம்பிகை, விநாயகப் பெருமான், திருஞான சம்பந்தர் முதலியோரின் பெருமைகளையும் திருப்புகழில் காணலாம்.

உலகத்தில் மக்கள் பிறந்து பல வகையான துன்பங்களை அடைந்து வாட்டமுறுவதைப் பல காட்சிகளாகச் சித்தரித்திருக்கிருர். மனிதன் அடைகின்ற துன்பங்களுக்கெல்லாம் மூலமான துன்பம் பிறப்பு என்பது. அந்தப் பிறப்புக்கு மூலகாரணமாக இருக்கும் தீய குணங்கள் பல. ஆனுலும் பெரும்பான்மையான மக்கள் காமம் என்ற நோய் வாய்ப்பட்டே துன்புறுகின்றனர். அதனுல் அருணகிரி நாத சுவாமிகள் உலகியலைப் பற்றிப் பாடுகின்ற பாடல்களில் காமத்தைப் பற்றிய பேச்சு மிகுதியாக இருக்கும். மங்கையர் மையலில் உழன்று படும் துன்பங்கள் மிக விரிவாகக் காணப்படும். அவற்றைக் கண்டு அருணகிரியார் அத்தகைய அனுபவத்தைப் பெற்றுப் பின்பு அறிவு தெளிந்து, இறைவனிடத்தில் ஈடுபட்டார் என்று சில ஆராய்ச்சியாளர்கள் சொல்வார்கள். அப்படிச் சொல்வது முறையாகத் தோன்றவில்லை. அருணகிரியார் தம் பாடல்களில் சொல்லியிருக்கின்ற அத்தனை தீய அனுபவங்களையும் தொகுத்துப் பார்த்தால் ஒரு மனிதன் தன் வாழ்நாளில் அனுபவிக்கக் கூடிய அனுபவங்களாகத் தோன்ற. அவர் வரிசை வரிசையாகச் சொல்கின்ற அத்தனை தீய அனுபவங்களையும் பல பல பிறவிகள் எடுத்தால் தான் அனுபவிக்க முடியும்.

அப்படியானுல் அருணகிரியார் எதற்காக அவற்றை எடுத்துச் சொன்ஞர் என்ற கேள்வி எழலாம். உலகத்தில் மக்கள் படுகின்ற துன்பத்தைக் கண்டு அவர்கள் வாயில்லாப் பூச்சிகளாக இருக்கிருர்களே என்று இரங்கி அவர்கள் பெருமானிடத்தில் விண்ணப்பம் செய்வதற்காகப் பல விண்ணப்ப பிரதிகளாக அவற்றைக் கொடுத்திருக்கிருர். உலகத்தை எல்லாம் தாமாகப் பார்க்கிற உயர்ந்த அனுபவ நிலையில் வாழ்ந்த ஞானி அவர். தம் குழந்தையின் நோய்க்காக மருந்து உண்ணும் தாய் போன்ற கருணை உள்ளம் படைத்தவராதலின் உலகத்தாரின் துன்பங்களைத் தாம் ஏறிட்டுக் கொண்டு அவர்களுக்காகப் பாடிய பாடல்கள் அவை என்றே கொள்ள வேண்டும். இப்பொழுது உலகத்தில் உள்ள பெரும்பான்மையான மக்களைத் தாக்கி வாட்டி வதைத்து உருக்குலைக்கும் நோய் காமம் என்ற பெரு நோய் ஆதலினுல் அந்நோயைப் பற்றிய வருணனைகள் அவர் பாட்டில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

பொதுவாக, சைவ சித்தாந்தம், அத்வைதம், த்வைதம், விசிஷ்டாத்வைதம் என்ற சமய வேறுபாடுகள் இருந்தாலும் ஒவ்வொரு நெறியை விரித்து உரைத்திருக்கிருர்கள். ஞான சம்பந்தப் பெருமான் முதலிய நாயன்மார்கள் எல்லோரும் சிவனடியார்கள் ஆனுலும் ஒவ்வொருவருடைய முறையும் வெவ்வேறு வகை. ஞான சம்பந்தப் பெருமான் சம்புத்திர மார்க்கத்தில் இறைவனை அடைந்தார் என்றும், அப்பர் சுவாமிகள் தாச மார்க்கத்தில் இறைவன் அருளைப் பெற்ருர் என்றும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் சகமார்க்கத்திலும், மாணிக்க வாசகர் சன்மார்க்க நெறியிலும் சென்று இறைவன் அருளைப் பெற்ருர்கள் என்றும் கூறுவார்கள். இவ்வாறே ஒவ்வொரு பெரியாரின் வாழ்க்கை முறையையும் ஆராய்ந்து பார்த்தோமாயின் அவர்கள் எல்லோருக்கும் அடிப்படையாக அமைந்துள்ள சமயக் கொள்கைகள் இருந்தாலும் அவரவர்களுக்குச் சொந்த அனுபவமாக அமைந்த சிறப்பான கொள்கைகளையும் பார்க்கலாம். இதைத்தான் மேல் நாட்டார் அவர்களுடைய தத்துவமுறை என்று கூறுவர்.

அருணகிரிநாதப் பெருமானின் திருவாக்கை எல்லாம் ஆராய்ந்து

பார்த்தால் அவருடைய திருவுள்ளத்தின் இயல்பு என்ன என்பது புலன் ஆகும். முருகன் அடியார் அவர் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. ஆனல் தம், தம் கடவுளை உயர்த்திப் பாடுகின்ற மற்ற அடியார்கள் ஏதேனும் ஓர் இடத்தில் தங்கள் உபாசன மூர்த்தி அல்லாத கடவுளைப் புறக்கணிக்கின்ற முறையில் பாடியிருக்கக் கூடும். அருணகிரி நாதர் அத்தகைய வர்களைச் சேர்ந்தவர் அல்லர். தம்முடைய பேரன்புக்குரிய முருகனைப் போற்றிப் பாடுவதோடு மற்றத் தெய்வங்களையும் உயர்த்திப்பாடி அந்த தெய்வங்களுக்கு முருகன் இன்ன உறவு என்பதைச் சொல்வதன்மூலம் முருகனின் சிறப்பைப் பின்னும் உயர்த்திய பெரியார் அவர். சிவ பெருமானுடைய புகழாகவே சொல்லிக் கடைசியில் முருகனை அப்பெருமானின் மகனே என்று விளிப்பார். திருமாலின் சிறப்பாகவே பாட்டு முழுவதும் கொண்டு வந்துவிட்டுக் கடைசியில் அவர் மருகோனே என்று முருகனை உயர்த்துவார். இது தான் அவரது சமரச நெறியும், முறுகிய பக்தியும் இணைந்து உருவெடுக்கும் முறை. யோக நெறிகளைப் பற்றியும், ஞான விசாரத்தைப் பற்றியும், பக்திப் பண்பாட்டைப் பற்றியும், கர்மயோகச் சிறப்பைப் பற்றியும் பலப் பல பாடல்களில் அவர் தம் கருத்தை வெளியிட்டிருக்கிறார். அப்படியானல் அவர் ஞானியா, யோகியா, பக்தரா என்ற ஐயம் நமக்கு எழும். அவரது தத்துவ நெறி எது என்ற பெரிய கேள்வி நம் முன்னல் நிற்கிறது.

பெரும்பாலும் உலகத்தினர் அருணகிரிநாதர் கடைப்பிடித்த வழி 'பக்தி' என்று சொல்வர்: பல தலங்களுக்குச் சென்று ஆங்காங்கு கோயில் கொண்டுள்ள முருகப்பெருமானை வழிபட்டுத் திருப்புகழ் என்ற அற்புதமான நூலை அவர் நமக்கு ஆக்கித் தந்திருக்கிறார். இந்த நெறி பக்தி நெறி என்று பொதுவாக நாமும் ஒப்புக் கொள்கிறோம். அருணகிரியார் தலைமையான பக்தர் ஆயினும் அவருக்கு ஞானமும் தெரியும் யோகமும் தெரியும்.

அவரது பக்தி, ஞானத்திற்குப் புறம்பானது அன்று. யோகத்திற்குப் புறம்பானதும் அன்று. அது பெரிய மரமாக வளர்ந்து, தனக்குள் மற்ற எல்லா நெறிகளையும் கிளைகளாகக் கொண்டது. பக்தி யோகம் என்று ஒன்றைச் சொல்வார்கள். ஞானம் என்ற முடிவை அடைவதற்குப் பக்தி வழியாக இருப்பதாக வேதாந்த நூல்கள்பேசுகின்றன. அருணகிரியார் திருவுள்ளத்தில் கிளர்ந்து எழுந்த பக்தி அத்தகையது அன்று. பக்தி வழியாக இருக்க அதற்கு முடிவாகிய ஒன்று தலைப்பட்டதும் அந்த வழி நழுவி விடும். அத்தகையது அன்று இது. ஞானம் இல்லாமல் முத்தி கிடைக்காது என்று வேதாந்திகள் சொல்வார்கள். அந்த ஞானம் பக்தி இல்லாவிட்டால் விளையாது. பக்தியாகிய கனிவும், கர்மம் என்ற சாறும் கலந்தால்தான் ஞானக்கனி கிடைக்கும். பச்சை நிறமுள்ள காய் கனிவு கண்டவுடன் மஞ்சள் நிறமாகி உள்ளேயுள்ள புளிப்புச் சுவையுள்ள சாறு இனிமையை அடைவது போல பக்திக் கனிவினல் ஞானம் பழுத்து, கர்மம் என்ற சாறு சுவையுள்ளதாக மாறும், அப்போது கனிந்த கனியே இன்ப அனுபவம். பக்தி யோகம், ஞான யோகம், கர்ம யோகம் என்று சொல்லும் வழிகள் பெரியோர்களால் அனுசரிக்கப் பெற்று வருகின்றன. அருணகிரி நாதப் பெருமான் பக்தி யோகியா? இல்லை. அதைப் பக்தி நெறி என்று சொல்லலாம். பக்தி நெறி என்பது யாது?

'' முத்திநெறி அறியாத மூர்க்கரொடு
முயல்வேனைப்
பக்திநெறி அறிவித்துப் பழவினைகள்
பாறும் வண்ணம்
சித்தமலம் அறிவித்துச் சிவமாக்கி
எனை ஆண்ட
அத்தன் நமக் கருளியவா றார்பெறு
வார் அச்சோவே!''

என்று மாணிக்க வாசகர் பேசுகின்றார். மாணிக்க வாசகப் பெருமான் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நெறிகளில் ஞானத்தின் உச்சியில் நின்றவர் என்று சைவ சித்தாந்திகள் சொல்வார்கள். ஞானப் பிழம்பாகிய மாணிக்க வாசக சுவாமிகள், இறைவன் தமக்குப் பக்தி நெறியை அறிவித்தான் என்று சொல்லுகிறார். அவரும் பக்தர் தாம். அவருடைய பக்தி வேறு, பக்தி யோகம் வேறு. மாணிக்க வாசகர் உலகியலில் ஈடுபட்டு அமைச்சராகப் பணியாற்றி வந்தவர். அவரை எம்பெருமான் தடுத்தாட் கொண்டார். மனம் உருகி இறைவன் இன்ப அனுபவத்தைப் படிப்படியாகச் சுவைத்தார். ஒரே அடியாக ஒன்றை விழுங்குவதைக்காட்டிலும்சிறிது சிறிதாக நுகர்ந்தால் சுவையும் நீளும். அப்படி எம்பெருமானின் திருவருள் அனுபவ இன்பத்தை மெல்ல, மெல்ல உண்டவர். அதனல் மற்றவர்கள் அனுபவிக்கின்ற அனுபவத்தைக் காட்டிலும் மாணிக்க வாசருக்கு அனுபவம் நீண்டதாகவும், உயர்ந்ததாகவும், சிறந்ததாகவும் அமைந்தது.

ஒரு வகையில் அருணகிரி நாத சுவாமிகளின் திருவுள்ளத்தை மாணிக்க வாசகர் திருவுள்ளமாகச் சொல்லலாம். ஆனல் மாணிக்க வாசகர் அருணகிரி நாத சுவாமிகளைப் போல் உலகியலை மிக மிக விரிவாகக் கண்டார் இல்லை. அவர் அமைச்சராக இருந்ததோடு சரி. அருணகிரி நாத சுவாமிகளோ பல வகையான மக்களின் இயல்பைப் பார்த்து இரங்கி மனம் உருகினவர். அவருக்கு முருகப் பெருமான் கருணை நிரம்பிய கடவுளாகத் தோன்றினன். தடுத்து ஆட்கொள்ளும திறன் கருணை மிகுதியைக் காட்டுகிறது. பக்குவம் உடைய ஆன்மாக்கள் நல்லின்பம் அடையும்படி அருள் செய்வது இயற்கையான வழி. அப்படி இல்லாமல் தன்னை மறந்த நிலையில் செல்

கின்ற ஆன்மாக்களுக்குப் பக்தியைக் கொடுத்து அவர்களைத்தடுத்து இறைவன் ஆட்கொள்கிறான். சுந்தர மூர்த்தி சுவாமிகளை அப்படி ஆட் கொண்டான். இப்படித் தடுத்தாட் கொள்ளும் பெருமை முருகப் பெருமானிடத்திலும் சிறந்து நிற்கிறது. அது வள்ளியம் பெருமாட்டியின் வரலாற்றில் தெரிகிறது. மற்ற அடியார்களை இறைவன் தடுத்து ஆட் கொண்ட வரலாறுகளைச் சைவ, வைணவ புராணங்கள் சொல்கின்றன. வள்ளியம்மையை தடுத்து ஆட்கொள்ள முருகன் சென்றது மிக, மிகச் சிறந்த பண்பு. சன்மார்க் கத்தில் வருகின்ற பேரின்பத்தை வள்ளியம்மை பெற்றாள். அதை அருணகிரிநாதர் 'வள்ளி சன்மார்க் கம்' என்று வள்ளிமலைத்திருப்புகழில் பேசுகின்றார். முருகப் பெருமான் வள்ளியைத் தடுத்து ஆட்கொண் டான் என்பதை அவர் பல இடங் களில் குறிப்பாகவும், வெளிப்படை யாகவும் தெரிவித்திருக்கின்றார்.

உலகியற் பாசத்தில் கட்டுப்பட்டு பிரபஞ்சச் சேற்றில் உழலும் மனிதன் முருகனிடத்தில் உண்மையான அன்பு பூண்டு, நெஞ்சம் மகிழ்ந்தால், மனம் உருகினால் அவன் கருணை செய்ய வருவான் என்ற பெரிய நம்பிக் கையை உண்டாக்குவது அருணகிரி யாரின் இயல்பு. யோகம் செய்து முயற்சி பண்ணி, மூலாதாரத்து அக் கினியை மேல் எழுப்பி, ஆதாரங் களை எல்லாம் கடந்து சென்று சகஸ் ரார சக்கரத்தை அடைந்து, அங்கே பொழியும் அமுதத்தைப் பருகலாம் எனச் சொல்லுகின்ற யோக முறை களை அருணகிரியார் தெரிந்துகொண் டிருந்தார். அவாக்களை அறுத்து இந் திரிய நிக்கிரகம் செய்து, உணவை ஒடுக்கி விரதங்களைக் கடைபிடித்து ஞான நெறியில் நிற்பது அவருக்குத் தெரியும். ஆனால் அவை அத்தனை யும் எல்லோருக்கும் கைவந்த நெறி கள் அல்ல. உலகிலுள்ள பல்லா யிரக்கணக்கான மக்களில் சிலருக்கே யோகம் செய்ய முடியும். பல லட் சக்கணக்கான மக்களுள்ளே யாரே னும் ஒருவர் இந்திரிய நிக்கிரகம் செய்து ஞானத்தை அடையலாம். ஆனால் முருகப் பெருமானின் திரு அவதாரம் மேல் சபைக்குப் பிரதிநிதி பொறுக்குகின்ற தேர்தல் அல்ல. உலகில் வாழ்கின்ற பெரும்பாலான மக்களுக்கு அருளைப்பரப்ப வேண்டு மென்று கருதியே முருகன் அவதாரம் செய்தான். ஆதலால் பெரும் பாலான மக்களுக்குப் பயன்படுகிற நெறி எதுவோ அந்த நெறியில் உண் மையான நம்பிக்கையையும், பற்றை யும் உண்டாக்க வேண்டுமென்பது அருணகிரியாரின் திருவுள்ளம். முருகப் பெருமானை மிக மிக எளியவனாக அவர் காட்டுகிறார். எத்தகைய வாழ்க்கையை உலகத்தில் அனுபவித் துக் கொண்டிருப்பவனாக இருந்தா லும் முருகனிடத்தில் பக்தி கொண்டு நெஞ்சு நெகிழுமானால் அந்த நெகிழ்ச்சி அவனைப் படிப்படியாக ஏற்றி நிரதிசய ஆனந்தத்தைப் பெறச் செய்யும் என்பது அவர் திரு வுள்ளத்தில் கொண்ட நெறி. தம் பாடல்களில் எடுத்துக்காட்டும் சிறப் பான நெறியும் அதுவே.

பக்தி என்பது ஒரு படி. அதற்கு அப்பாலே இந்திரிய நிக்கிரகம் என் பது ஒரு படி. அதற்கு அப்பால் அருள் பதிதல் என்பது ஒரு படி. பின்பு இன்பத்தைப் பெறுதல் என் பது கடைசிப் படி என்று விளக்கிக் காட்டுகின்ற நூல்கள் பல இருக்கின் றன. அருணகிரிநாதப் பெருமாள் சொல்வது என்ன? முருகப் பெருமா னின் நினைப்பைக் கொள்வது அன் பின் முதல் படி. அந்த நினைவு தோன்றிய பிறகு நெகிழ்ச்சி பெறு வது அன்பின் இரண்டாவது நிலை. நெகிழ்ச்சி பெற்ற பிறகு உலகத்தி லுள்ள ஆசை அத்தனையும் நழுவுவது அடுத்த நிலை. நழுவின பிறகு எம் எம்பெருமான் திருவருள் படிவது தொடர்ந்து வரும் அனுபவம். அதன் பயனாக பேரின்பம் பெரும்நிலை அன்பு பழுக்கும் நிலை வரும். முதலில் தோன் றிய அன்பே வெவ்வேறு பக்குவத் தில் தழைத்து வளர்த்து முதிர்ந்த நிலையில் பேரின்ப அனுபவமாகிறது. இது அருணகிரி நாதருக்கேயான நெறி அன்று. திருமூலர் இதைச் சொல்கிறார்.

" அன்பும் சிவமும் இரண்டென்பர்
அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்
தாரே "

என்பது திருமந்திரம். அன்பு என் பது வழி. சிவம் என்பது அவ்வழி யினுடைய முடிவில் உள்ள லட்சியம் என்று சொல்வது பிழை. அன்பு என்ற ஒரு நிலையே சிவமாக மாறுகிற தென்ற கருத்து, திருமூலர் வாக்கி லிருந்து புலப்படுகின்றது.

முதலில் எம்பெருமானின் நினைவு உள்ளத்தில் தோன்றினால் அது குறு கிய வழியாக முதலில் தோன்றி, வர வர அதுவே விரிந்து பெரிய வழி யாக வளர்கிறது. பெரிய மலையில் சிறிய சிறிய ஊற்றுக்கால்களாகத் தோன்றிய நீர் மிகக் குறுகிய அள வோடு புறப்படுகிறது. அந்த மலை யில் ஊற்றெடுத்து இழிந்து வந்த நீர் மெல்ல, மெல்ல ஒன்றுகூடி ஒரு கால் வாய் ஆகிப் பின்பு வேகம் பெற்று அருவி ஆகிறது. அந்த அருவி கட கடவென்று நிலப் பரப்புக்கு வந்த பிறகு தொடர்ந்து படர்ந்து விரிந்து செல்கிறது. விரிந்தக் கால்வாய் ஆறாகிப் பெருகிப் பல வயல்களைப் கொழிக்கச் செய்கிறது. கடைசியில் அது கடலோடு கலந்து விடுகிறது. மலையில் தோன்றிய ஊற்று வேறு, கீழே வந்த சிற்றாறு வேறு. பேராறு வேறு, கடலோடு கலந்த ஆறு வேறு என்று சொல்ல முடியுமா? அங்கே தோன்றிய ஊற்றுநீர் கடலோடு கலக்கும் போதும் இருக்கிறது. ஆனால் பல்வேறு நிலையில் பல்வேறு விளைவுகளை உண்டாக்குகிறது. அருண கிரியார் கூறும் பக்திக்கு இதைத் தான் உதாரணமாகச் சொல்லலாம்.

தோன்றும் போது நெஞ்சில் நினைவாகத் தோன்றி, முடியும் போது இரண்டற்ற இன்பமயமாக ஆவது அருணகிரியார் காட்டும் பக்தி நெறி. இதை அவருடைய பாடல்கள் பலவற்றிலிருந்து உணரலாம்.

பத்தித் துறையிழிந்து ஆனந்தவாரி படிவதனால்
புத்தித் தரங்கம் தெளிவது என்றோ?

என்று அலங்காரத்தில் பாடுகின்றார். பக்தி துறையில் இழிந்தால் ஆனந்தம் என்ற கடலில் கலந்து கொள்ளலாம் என்பது அவர் கருத்து. பக்தி துறை யாது? அது எங்கே தொடங்குகிறது? அது எப்படி விரிகிறது. பக்தி என்பது உணர்ச்சி. நம் உள்ளத்தில் தோன்றுகின்ற உணர்ச்சி வகைகளுக்குக் கொழுந்தாக இருக்கிறது அது. தோன்றும் போது அது சிறியதாகத் தோன்றும். அதாவது ஒருவனுக்கு முருகன் பால் அன்பு பிறந்தால் நினைப்பாகத் தோன்றும். அவன் முருகன் படத்தைப் பார்ப்பான். பின்பு அவனது கோயிலுக்குச் செல்வான். அவன் பாட்டைக் காதினால் கேட்பான். வரலாற்றை படித்து இன்புறுவான். பின்பு அதனுடைய தத்துவத்தை நன்கு உணர்ந்து தியானத்தில் அமர்ந்து விடுவான். கண்ணாலே கண்ட முருகன் கோலத்தையும் காதாலே கேட்ட முருகன் உபதேசத்தையும் தனியாக இருக்கும்போது தன் நெஞ்சிலே புதைக்கப் புகும் போது புறத்தில் தோன்றுகின்ற பொருள்கள் அத்தனையையும் களைந்து விட்டு தன் நெஞ்சில் வைத்துக் கொண்ட தோற்றத்தை நிலைநிறுத்தப் பார்ப்பான்; முயற்சி கைகூடி முருகனது தோற்றம் அவன் நெஞ்சில் சிதையாது இருக்கும்போது அவன் உணர்ச்சி ஒடுங்கி இருக்கும். அப்போது சமாதி நிலை கைகூடும். அதற்கு அப்பால் மெல்ல மெல்லப் பக்குவம் இயைந்து அநுபவ இன்பக் கடலில் வீழ்ந்து விடுவான்.

இதைப் பல்வேறு இடங்களில் அருணகிரியார் சொல்கிறார். "நான் பரமானந்த சாகரத்தைக்கண்டேன்" என்கிறார். அந்தச் சாகரம் எங்கேயிருந்து வந்தது? "என் புத்தியில் சிறிய ஊற்றாகத் தோன்றியது. வாழ்க்கையில் ஒரு பகுதியாக இடம காலம் ஆகிய எல்லைக்குள் அடங்கிய என் புத்தியில் தோன்றிய பக்தியாகிய உணர்ச்சி, மெல்ல, மெல்ல வளர்ந்து எல்லைகளை உடைத்து கொண்டு பரமானந்தக் கடல் ஆகி விட்டது".

பக்தியிலே தொடங்கி, பக்தியிலே விளைந்து, பக்தியிலே மடங்கி, பக்தியிலே இன்பம் பெற்றுக் கரைவது தான் அருணகிரியார் திருவுள்ளம்.



# ஸ்ரீ இராமானுஜரின் பெருமை

திரு. T. N. C. P. பாஷ்யம்-குன்னூர்.

'பெரும்பூதூர் மாமுனிக்கு பின்னானாள் வாழியே' என்பது ஆண்டாள் வாழிய திருநாமத்திலே வருகின்ற வாக்கியம். இந்த வாக்கியத்தில் பல பொருள்கள் நிறைந்து உள்ளன. ஸ்ரீ உ. வே. இராமானுஜர் திருப்பாவை ஜியர் என்று வழங்கப்படுகின்றார். அவர் மார்கழி மாதத்தில் விடியற் காலை மணி 3-00க்கு நீராடிவிட்டு ஸ்ரீரங்கத்தில் திருவீதி வழியாக பிரதட்சணம் வந்தவுடன் அரங்கனை ஸேவித்து விடுவார். அது அவரின் பழக்க வழக்கமாக இருந்து வந்தது. அதன் பிரகாரம் ஒரு மார்கழி மாதம் அதிகாலையில் திருப்பாவை பாசுரத்தை ஸேவித்த வாறே வருகின்ற சமயம் ஒரு கிரஹத்தின் வாசலில் ஒரு மங்கையானவள் அதிகாலையில் வீட்டை பெருக்கிச் சுத்தமிட்டு கோலம் இட்டுக் கொண்டு இருக்கும்போது அந்த வழியாக வந்த இராமானுஜர் 'உந்து மதகளிற்றனோடாத தோள்வலியன் நந்தகோபாலன் மருமகளே நப்பின்னாய்' என்ற திருப்பாவை 18வது பாசுரத்தை ஸேவித்துக் கொண்டு அம்மங்கையை சாஷ்டாங்கமாக ஸேவித்து விட்டார்.

அந்த மங்கையும் ஒரு ஸன்னியாஸி என் காலில் வந்து வணங்குகின்றாரே என்று வெகுண்டு பயந்து தன் தந்தை ஸ்ரீ உ. வே. பெரிய நம்பிகளிடம் சென்று நடந்த விஷயத்தை எடுத்து கூறினாள். அவர் தனது அறிவால் தெளிவாகப் புரிந்து கொண்டு 'உன்னை ஸேவித்தவர் சாதாரண ஸன்னியாஸி இல்லை அம்மா. அவர் வைஷ்ணவ ஸித்தாந்தத்தை பிரகாஸ படுத்தி விசிஷ்டாத்துவைதத்தையும் வேதத்திற்கு பாஷ்யமும் கண்டவர் அம்மா. அவர் பாஷ்யகாரர் இராமானுஜர். உந்து மதகளித்றன்னோடாத தோள்வலியன் என்ற பாசுரத்தில் வருகின்ற நப்பின்னை' நீ. நந்தகோபாலனாகிய ஸாட்சாத் புருஷோத்தமன் ஆன ஸ்ரீகண்ணனின் மருமகள் அம்மா. அந்த இராமானுஜர் பக்தியின் சிரத்தையின் காரணமாக உன்னை ஸேவித்து விட்டார் நீ பயப்படும்படி ஒன்றும் ஆகவில்லை. கவலைப்படாதே அவர் என்னிடம் குரு சிஷ்ய பாவமாக உபதேசம் பெற்றவர். அவருக்குப் பல ஆசாரியர்கள் உண்டு. அவர்களிடம் உபதேசம் பெற்றதை போன்று என்னிடம் உபதேசம் பெற்றவர். ஆசாரியரின் மகள் சிஷ்யர்க்கு தாய்க்கு சமமானவள் ஆதலால், அவர் ஸ்ரீ ஆண்டாளிடம் அளவு கடந்த பக்தியின் காரணமாக மேற்படி சம்பவம் நடந்தது' என்று ஸ்ரீபெரிய நம்பிகள் ஸ்வாமி அவருடைய திருக்குமார்த்தியாகிய அத்துழாயிடம் எடுத்துச் சொன்னார்.

'உடன் வாசலில் சென்று அந்த இராமானுஜரை அழைத்து வா' என்றார் பெரிய நம்பிகள். அத்துழாயும் வெளியில் வந்து பார்த்தாள். அதற்குள் இராமானுஜர் வீதி வழியாக சென்று விட்டார்.

# செய்திச் சுருக்கம்



## புதிய கிரீடம்

அண்மையில் பெல்ஜியம் நாட்டி லிருந்து தருவிக்கப்பட்ட வைரக் கற்களைக்கொண்டு திருமலை ஸ்ரீ வேங் டேஸ்வர சுவாமி மூலவருக்கு கிரீடம் ஒன்றினை செய்யும் பணியினை, அண் மையில் ஆந்திர மாநில தலைமைச் செயலாளர் திரு. ஸ்ரவண் குமார் அவர்கள் துவக்கி வைத்தார். இப் பணி, பெங்களூரைச் சேர்ந்த சூரஜ் மல் எனும் வைர வியாபார நிறு வனத்திற்குக் கொடுக்கப்பட்டது. ரங்கூன் வைரக் கற்களைக் கொண்டு ரூ. $1\frac{1}{2}$ இலட்சம் செலவில் தயாரிக் கப்பட்ட அவர்களது மாதிரி கிரீடம் தேவஸ்தான மேலாண்மை ஏற்றுக் கொள்ளவில்லையாயினும் அவர் கள் அம் மாதிரி கிரிடத்தினை தி. தி. தேவஸ்தானத்திற்கு இலவசமாக அளித்துள்ளனர். மேலும் தி. தி. தே. கொடுத்த மாதிரி போன்றே வைரக் கிரீடத்தினை செய்ய ஆகும் ரூ. $7\frac{1}{2}$ இலட்சம் தயா ரிப்பு செலவினையும் அந்நிறுவனத் தார் ஏற்றுக் கொள்ளாமல், இலவச மாகவே தயாரிக்க ஒப்புக் கொண்ட னர்; இப்போதுள்ள மூலவரின் வைரக் கிரீடம், 1947இல், சூரஜ் மல் நிறுவனத்தின் தற்போதைய உரிமையாளரின் தகப்பனார்தாம் தயாரித்தார் என்பது குறிப்பிடத் தக்கது.

## ஸ்ரீஜெயேந்திரர் பொன் விழா!

காஞ்சிபுரம் ஸ்ரீஜெகத்குரு ஜெயேந் திர சுவாமிகளின் பொன்விழா அண் மையில் காஞ்சிபுரம் குமர கோட்டக் கலையரங்கில் வெகு சிறப்பாக நடை பெற்றது.

இந்து தமிழ்க் கவிஞர் மன்றச் சார்பில் நடைபெற்ற இவ்விழாவில் சுவாமிகள் கவிஞர்களுக்குப் பொன் னாடை போர்த்திச் சிறப்பித்தார்.

“தமிழில் முற்காலத்தில் மரபுக் கவிதைகள் சிறப்பாகப் புனையப் பட்டன. சமயவுணர்வும் தமிழ்ப் பற்றும் நிறைந்த பாடல்களைப் புல வர்கள் பாடி வந்தனர். தற்காலத் தில் மரபுக் கவிதைகள் குறைந்து விட்டதோ என்னும் ஐயம் தோன்று கின்றது. எனவே, புலவர்கள் மரபுக் கவிதைகளைப் போற்றும் வகையில் தங்கள் கவிதைகளைப் புனைய வேண் டும். இந்த ஆண்டு இளைஞர்கள் ஆண்டு! எனவே, இளைஞர்களுக்குப் பயன்படும் வகையில் பாடல்கள் புனைய வேண்டும். விரைந்து கவி பாடும் புலவர்கள் சிறந்து விளங்க ஆசீர்வதிக்கிறோம்!''

இவ்வாறு சுவாமிகள் பொருள் பொதிந்த அருளுரை வழங்கினர். சுவாமிகளின் பொன்விழா நினைவாகப் பொன்விழா மலர் ஒன்றும் வெளி யிடப் பெற்றது. விழாவுக்குப் பொரு ளுதவி புரிந்தோர்க்கும் வருகை தந் தோர்க்கும் மன்றஅமைப்பாளர் திரு. மா. வேங்கடேசன் நன்றி கூறினர்.

தகவல்:

மா. சிதாராமன், காஞ்சிபுரம்.

## புதிய விருந்தினர் விடுதி

திருமலையில் யாத்திரிகர்களின் நலனுக்காக ரூ. 12 இலட்சம் செல வில் மூன்றடுக்குகளைக் கொண்ட ‘கருடாத்ரி தங்கு விடுதி’ எனும் கட் டிடம் ஒன்றினை ஆந்திர மாநில தலை மைச் செயலாளர் திரு. ஸ்ரவண் குமார் அவர்கள் திறந்து வைத்தார். 24 அறைத் தொகுதிகளைக் கொண்டு, குளியலறை இணைப்புடன் கூடிய இவ்விடுதி மேஜை நாற்காலி வசதிகளைக் கொண்டதாகும்.



### அடிக்கல் நாட்டு விழா :

திருப்பதி தி. தி. தேவஸ்தானத்தாரின் காது கேளோர் மற்றும் வாய் பேசார் பள்ளி அரங்கினுள், மற்றுமொரு புதிய கட்டிடத்திற்கு ஆந்திர மாநில தலைமைச் செயலாளர் திரு. ஸ்ரவண்குமார் ஐ ஏ.எஸ். அவர்கள் அண்மையில் அடிக்கல் நாட்டினார். இது சம்பந்தமாக அன்று காலை ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகை புரிந்தோரை தி. தி. தே. மக்கள் தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்ய நாராயணமூர்த்தி அவர்கள் வரவேற்க, பள்ளி முதல்வர் திரு: கல்பசாயி அவர்கள் ஆண்டு அறிக்கையினை வாசித்தார். பின்னர் விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றிய தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எஸ். லக்ஷ்மி நாராயணா ஐ. ஏ. எஸ். அவர்கள், விரைவில் ரூ. 2 கோடி செலவில் 50 ஏக்கர் நிலப்பரப்பில், காது கேளோர், வாய் பேசார், உடல் ஊனமுற்றோர் ஆகியோர் சம்பந்தப்பட்ட பெரிய கட்டிடத் தொகுதி ஒன்று திருப்பதியில் நிறுவப்படும் என்று குறிப்பிட்டார். பின்னர் புதியதொரு கட்டிடத்திற்கு அடிக்கல்நாட்டிப்பேசிய திரு. ஸ்ரவண்குமார் அவர்கள் இதுபோன்ற பள்ளிகளின் முக்கியத்துவத்தைக் குறிப்பிட்டு, இப்பள்ளி மேலும் உயர்ந்து, இந்தியாவில் ஒரு குறிப்பிடும் மாபெரும் நிறுவனமாக விளங்கிட, அரசு தன்னாலியன்ற உதவிகளை தந்திடும் என்று உறுதியளித்தார். பின்னர் புதியதாக இப்பள்ளியில் சேர்க்கப்பட்ட காதுகேளாத மாணவ மாணவிகளுக்குக் காது கேட்கும் கருவிகளை தி.தி.தே. சார்பில் வழங்கினார். மேலும் மைசூரைச் சேர்ந்த திரு. எம். எஸ். மூர்த்தி அவர்களால் நன்கொடையாகக் கொடுக்கப்பட்ட துணிகளை அப்பள்ளி மாணவ மாணவிகளுக்கு வழங்கினார். பின்னர் தி. தி. தே. கல்வி அலுவலர் திரு. சந்திர சேகர நாயுடு அவர்கள் நன்றி நவின்றார். இவ்விழாவில் தி. தி. தே. இணை செயலாட்சித் தலைவர் மற்றும் சித்தூர் மாவட்ட ஆட்சியாளரும், உதவி ஆட்சியாளரும் கலந்து கொண்டனர். 1974-இல் தொடங்கப்பட்ட இப்பள்ளியில் 196 மாணவ மாணவிகள் உள்ளனர்.

---

## தி. தி. தேவஸ்தான பொறுப் பாண்மைக் குழு முக்கிய முடிவுகள் :

திருமலையில் விரைவில் இந்தியாவிலேயே பெரியதாக விளங்கக்கூடிய வகையில் 247 அடி, 6 அங்குலம் உயரமுள்ள, ரூ. 3 கோடி செலவில் கோயில் கோபுரம் ஒன்று கட்டப்படும்.

திருமலையில் 'வைகுண்டம்' என்றழைக்கப்படும் நவீன 'க்யூ' கட்டத் தொகுப்பில் தரிசனத்திற்காக கூடும் யாத்திரிகர்கள் பயனுறும் வகையிலும், பல சமய நிகழ்ச்சிகளை நடத்தவும் ரூ. 40 இலட்சம் செலவில் சிற்பக்கலை நுணுக்கங்களைக் கொண்ட கல் மண்டபம் ஒன்று கட்டப்படும்.

திருமலையில் பங்காரு வாகிலி (தங்கவாயில்) அருகில் உள்ள துவார பாலகர்களின் செப்புக் கவசங்களுக்கு ரூ. 24.25 செலவில் தங்கமுலாம் பூசப்படும்.

ஆந்திர மாநிலத்தின் சில கிராமங்களில் 50 வழிபாட்டுக் கூடங்கள் ஒவ்வொன்றும் ரூ. 50,000 செலவில் கட்டப்படும்.

தி. தி. தேவஸ்தான பொன் நகைகளை மதிப்பிடும் வகையில் அமைக்கப்பட்ட ஆலோசனைக் குழுவின் உறுப்பினராக சென்னை நாதள்ள சம்பத் செட்டி அவர்களின் இடத்தில், அவருடைய குமாரர் திரு. நாதள்ள ஆதிகேசவ குப்தா அவர்கள் நியமிக்கப்பட்டுள்ளார்.

அண்மையில் திருப்பதிக்கு அருகே உள்ள ஸ்ரீநிவாச மங்காபுரத்தில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் கோயிலான ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில் பாதுகாப்பாளர்களான பி. ஜெயராம ரெட்டி மற்றும் கே. ராமகிருஷ்ணா ரெட்டி ஆகியோர் 29-1-85 அன்று இரவு சில கொள்ளைக் காரர்களால் கொல்லப்பட்டனர் என்பது வாசகர்களுக்குத் தெரிந்ததே. தற்போது அவர்களுடைய குடும்பத்தாருக்கு தலா ரூ.10,000 வழங்க குழு முடிவு செய்துள்ளது.

திருமலையில் ஏழை யாத்திரிகர்களுக்கு இலவச முழு உணவு வழங்க, தி. தி. தேவஸ்தானம் பொது மக்களிடமிருந்து குறைந்தபட்ச தொகையான ரூபாய் ஒரு இலட்சத்தினை நன்கொடையாக ஏற்றுக் கொள்வதென்றும், அதனால்வரும் வட்டித் தொகையினைக் கொண்டு திருமலையில் இலவச உணவு வழங்கும் திட்டத்தினைச் செயற்படுத்த தேவஸ்தான மேலாண்மை முடிவு செய்துள்ளது. இது போது, நன்கொடை வழங்கும் நன்கொடையாளர்கள் வருடத்தில் 3 நாட்கள் திருமலையில் இலவசமாக தங்கவும், ஆரத்தியுடன் இறைவனைத் தரிசிப்பதற்குமான ஏற்பாடுகள் மேலாண்மையால் செய்து தரப்படும்.

திருமலையில் நவீன க்யூ கட்டிடத் தொகுதியில் வரையறுக்கப்பட்ட தொலைக்காட்சி நிகழ்ச்சிகளை பார்வையாளர்கள் கண்டுகளிக்கும் வகையில், தொலைக் காட்சி பெட்டிகளை வாங்குதற்கென ரூ. 50,000 ஒதுக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு ஸ்ரவண நட்சத்திர நாளன்றும் உற்சவர் தன் துணைப் பெண் தெய்வங்களுடன் திருமலை சன்னதி வீதிகளில் திருவீதிவுலா வருவதற்காக வருடத்திற்கு ரூ: 6000, ஒதுக்கப்பட்டுள்ளது.

திருமலையில் தி. தி. தே. இணை செயலாட்சித் தலைவராக திரு. வை. சக்ரதார் ராவ் ஐ. ஏ. எஸ். அவர்கள் நியமிக்கப்பட்டுள்ளார்.



---

*ஸப்தகிரி வாசகர் பெருமக்களும் விற்பனைப் பிரதிநிதிகளுக்கும், கதை மற்றும் கட்டுரை ஆசிரியர் பெருந்தகையினர்க்கும் எங்களுடைய தமிழ்ப் புத்தாண்டு நல்வாழ்த்துக்கள் பல உரித்தாகுக*

**—ஆசிரியர்.**

---

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

மலை ஜீயர் ஓரான் வழி பரம்பரையில் அபிஷிக்தராக்கப்பட்டார் என்பதும் ஸ்பஷ்டம்.

அஷ்டதிக்கஜங்கள் ஏற்பட்டது

அடுத்தபடியாக பெரிய ஜீயர் தமக்கு அஷ்டதிக்கஜங்கள் இருப்பது போலவே வானமாமலை ஜீயருக்கு ஏற்படவேண்டும் என்று திருவுள்ளம் பற்றி "ஸ்ரீமந் மஹார்ய ரணபுஸ்கல ஸுத்தஸத்வ" என்கிறபடியே வானமாமலை ஜீயருக்கும் அஷ்டதிக்கஜங்கள் ஏற்படுத்தி அருளினார். இந்த ஏற்றமும் மற்றைய ஆசார்யர்களுக்கு இல்லை.

தனியன் செய்தல்

நம்பெருமாளால் 'ஸ்ரீசைலேஸ தயாபாத்ரம்'' எனும் தனியன் அருளப் பெற்ற யதீந்திரப்ரவணர் தனது அபிமான சிஷ்யருக்கும் ஒரு தனியன் வேண்டும் என்ற அவாவில் ஜீயரின் அஷ்டதிக்கஜங்களில் முதலாவதான சண்டமாருதம் தொட்டாசார்யரின் பிதாமஹரான மஹார்யர் எனப்படும் தொட்டாச்சார்யாரை தனியன் அருளும்படி நியமிக்க அவரும் "ரம்யஜாமாத்ரு யோகிந்த்ர பாத ரேகா மயம்ஸதா" எனும் தனியனை அருளிச் செய்தார்.

இத்தனியனின் அழகைக் கண்ட பெரிய ஜீயர் தம்முடைய தனியனை "ஸ்ரீ சைலேஸ தயாபாத்ர" தனியனுடன் உத்தரவாக்கியமாக இத்தனியனைச் சேர்த்து அனுஸந்திக்கும்படி நியமித்து அதன்படி இன்றளவும் வானமாமலை சிஷ்யர்களால் அனுசந்திக்கப்பட்டு வருகிறது. தொட்டாச்சார் திருமாளிகைத் தனியன் புத்தகங்களிலும் இன்றளவும் முதல் வானமாமலை இராமாநுஜஜீயரின் "ரம்யஜாமாத்ரு யோகீந்த்ர" என்று இருப்பதைக் காணலாம்.

திருவாராதனத்திற்கு நம்பெருமாளை அடைதல்

மாமுனிகளும் வானமாமலைஜீயரும் கோயிலிலே தர்சன ப்ரவர்த்தகராக இருந்த காலட்சேபாதிகள் நடத்தி வரும் நாளிலே ஒருசமயம் வானமாமலை எம்பெருமான் வானமாமலை ஜீயரை தனதுகோயில் ஸ்ரீகார்யார்த்தமாக அனுப்பும்படி ஸ்ரீமுகம் அவரது தமையனார் ஸேனை முதலியார் மூலம் போகவிட அதை அரங்கனுக்கு விண்ணப்பித்து விடை கொள்வதற்கு பெரிய ஜீயர் வானமாமலை ஜீயரை அழைத்துக் கொண்டு கோவிலுக்குள் சென்று அரங்கநகரப்பன் திருமுன்பே தெண்டம் ஸமர்ப்பித்து இச்செய்தியை"அணியார் பொழில் சூழ் அரங்கநகரப்பா" எனும் நாள் பாட்டால் விண்ணப்பிக்க அரங்கனும் தன்னுடைய பூபாலராயனில் எழுந்தருளியிருந்த லக்ஷ்மி நாராயணனை அர்ச்சகமுகேந அருளப்பாடிட்டு ஸ்ரீவானமாமலை ஜீயர் கையிலே பிரஸாதித்து 'உமக்கும் உமது ஆசார்யருக்கும் திருவாராதனத்தின் பொருட்டு வருகிறோம்' என்று நியமித்தருள ஜீயரும் மாமுனிகளைப் பார்த்து "பெரியார்க்கு ஆட்பட்டக்கால் பெருத பயன்பெருமாறு" என்று விக்ஞாபிக்க மாமுனியும் உகந்து தம்மைப் போல் ஓர் அர்சா விக்ரகத்தையும் ஏற்படுத்தி வானமாமலை ஜீயருடன் ஆழ்வார் மங்களாசாஸனமாக திருக்குருகூரில் ஆழ்வாரை ஸேவித்து பின்பு வானமாமலை ஏற எழுந்தருளி ஜீயர் மடத்தில் அரங்கநகரப்பனாகிய லெக்ஷ்மிநாராயணனையும் தம்முடைய அர்ச்சாமூர்த்தியையும் தம்முடைய திருகைகளாலேயே பிரதிஷ்டிப்பித்தருளினார்.

திவ்யதேச யாத்திரை :

ஒருசமயம் பெரிய ஜீயர் வானமாமலை ஜீயரை அழைத்து தமக்கு உகப்பாக வடதேச யாத்திரை செய்து ஆங்காங்கு உள்ள திவ்ய தேசத்து எம்பெருமான்களை மங்களாசாஸனம் செய்து பரமத நிரசனம் செய்து எம்பெருமானின் தர்ஸனத்தையும், ஸ்தானங்களையும் ஏற்படுத்தும்படி நியமிக்க, ஜீயரும் நியமனத்தை சிரஸாவகித்து பாதசாரியாக தமது அஷ்டதிக்கஜங்களோடு ப்ரயாணமாகி பத்ரிநாராயணனையும் நேபாளத்தில் சாலிக்கிராமகிரியையும் மங்களாசாஸனம்செய்து ஆங்காங்கு புறமதஸ்தர்களை நிரசனம் செய்து வடதேசத்தில் பக்தி ப்ரபத்தி மார்க்கத்தை உபதேசித்து இராமாநந்தர் முதலியவர்களை சீடராகப் பெற்று நேபாளம் வரை எல்லா இடங்களிலும் தோதாத்ரி கத்தி எனும் ஸ்தானங்களை ஏற்படுத்தி ஆங்காங்கு தொடர்ந்து விசிஷ்டாத்வைதம் பரவ மஹந்துக்களையும் ஏற்படுத்தி மாமுனிகளின் உள்ளக்கிடக்கையை பூர்த்தி செய்தார்.

கணையாழியின் மூல சரிதம் :

யமுனைத் துறைவதால் தர்சனத்தில் அபிஷிக்தராக்கப்பட்ட எம்பெருமானார் பெருமாள் கோவிலிலிருந்து (காஞ்சிபுரம்) திருஅரங்கம் சேர்ந்து அரங்கனைத் தொழுது நிற்க அரங்கனும் அநுக்ரஹித்து உபய விபூதியையும் அதன் நிர்வாஹத்தையும் உடையவர்க்கு ப்ரஸாதித்து இந்த தர்சனத்திற்கு எம்பெருமானார் தர்சனம் என்று பெயரும் நாட்டி அதை ப்ரவர்த்திப்பதான முத்திரைச் சின்னமான கணையாழியையும் உடையவருக்கு ப்ரஸாதித்தார். இதன் உண்மை, ஒரு ஸ்ரீவைஷ்ணவன் உடையவரை தெண்டனிட்டு நெய்யாசகம் கேட்க உடையவரும் தமது விரலில் அணிந்திருந்த தர்சன ப்ரவர்த்தகச் சின்னமான கணையாழியை கழற்றி ஸ்ரீவைஷ்ணவர் கையிலே கொடுத்து 'இதைப் பிள்ளை உறங்கா வில்லிதாசரிடம் கொடுத்து நெய் வாங்கிப்போம்' படி பணித்த விஷயம் குருபரம்பரா ப்ரபாவத்தில் வ்யக்தம்.

இந்த மோதிரத்தை உடையவர் பட்டருக்கு பிரசாதிக்க பட்டரும் அதை நன்சியருக்கு வழங்க நன்சியரும் நம்பிள்ளைக்கு திருவிரலிலே இட்டார் என்பதும் குருபரம்பரா பூர்வமாக வ்யக்தம். அந்தக் கணையாழி பின்பு ஓராண்வழிக் கிரமத்திலே

மாமுனிகளிடம் சேர அது வானமாமலை ஜீயரிடம் சேர்ந்து இன்றைக்கும் அந்த பரம்பரையைச் சேர்ந்த வர்த்தமான வானமாமலை 28-வது பட்டம் சடகோப இராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகளிடம் விளங்கக் காணலாம் இதுபோலவே உபதண்டமுமாம்.

வனமாமலை ஜீயர் வடதேச திவ்ய யாத்திரையைப் பூர்த்தி செய்து திருவேங்கடம் வழியாக திரும்பும் போது திருமலையில் ஆசார்யரான மாமுனிகள் திருநாடு அலங்கரித்த விஷயம் கேட்டு சோகித்து தெளிந்து அவருக்கு பெருக்க திருஅத்யயனம் செய்து திருவேங்கடவரிடம் விடை கொண்டு திருஅரங்கம் எழுந்தருளினார். அங்கு பெரிய ஜீயர் திருநாடு அலங்கரிப்பதற்கு முன்பாக தம்முடைய திருவிரலில் அணிந்திருந்த கணையாழி, தம்முடைய திருதண்டத்தில் சேர்ந்திருந்த உபதண்டம், தம்முடைய ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளையின் திருவடி நிலைகளையும் வானமாமலை ஜீயரிடம் சேர்ப்பிக்கும்படியும் தமக்கு பெருக்க திரு அத்யயனம் செய்யும்படியும் ஜீயர் நாயனாரிடம் நியமித்து இருந்தார். அதன்படி அவற்றை எல்லாம் வான மாமலை ஜீயர் பெற்றுக் கொண்டு நியமனத்தை சிரஸாவகித்து அதன் படியே செய்துவந்தார். திருவரங்கம் பெரிய கோயிலிலும் வானமாமலையிலும்தான் இன்றளவும் மாமுனிகளின் வருஷாப்தி திருஅத்யயன உத்ஸவம் நடைபெற்று வருகிறது.

கிரந்த காலட்சேபம் :

பெரிய ஜீயர் கோயில் அண்ணனுக்கும் மற்றைய ஏனைய ஆசார்யர்களுக்கும் பகவத் விஷய ரஹஸ்ய க்ரந்த காலட்சேபம் சாதிக்கும்படி வானமாமலை ஜீயருக்கு நியமித்தபடியே ஜீயரும் அவர்களை அழைத்துக் கொண்டு எறும்பியிலும் திருமலையிலும் காலட்சேபம் சாதித்து சாற்றியருளினார்.

ஒராண் வழிக்கிரமம் :

இந்த க்ரமம் மாமுனிகளுக்குப் பின்பு வானமாமலை ஜீயருக்கும் அவருடைய பரம்பரைக்கும் இன்றளவும் இறங்கி உள்ளது. காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமி ஸாதித்த இராமாநுஜ சித்தாந்த ப்ரகாசிகையிலும் அந்த ஸ்வாமி இப்படியே பொறித்துவைத்துள்ளார்கள்.

இந்த க்ரமத்திற்கு ஏற்பட்ட தனிச் சிறப்பு யாதெனில் இவர்களே ஆசார்ய பதம் நிர்வஹிப்பதோடு ஏனைய ஞானாதிகாரிகளுக்கும் ஆசார்ய பதம் நியமிக்க அதிகாரம் பெற்றவர்களாகிறுர்கள்.

ஆக மேலே கொடுத்துள்ள உண்மைகளைக் கொண்டு ஸ்ரீவானமாமலை ஜீயரும் அவருடைய பரம்பரையில் அபிஷிக்தராக்கப்பட்ட ஜீயர்களும் ஒராண்வழிக்கிரம ஆசார்ய பதத்தைச் சேர்ந்தவர்கள் என்பது நிர்ணயிக்கப்பட்டதாகிறது. இவருடைய ப்ரபாவத்தை திருவேங்கடவன் ஒரு புரட்டாசி திருவோண உத்ஸவ சமயத்தில் பெரிய கேள்வி ஜீயருக்கு ஸ்வப்நமுகேந வெளிப்படுத்தியதும் யதீந்திரப்ரவண ப்ரபாவத்தில் ப்ரஸித்தம்.

ஒன்றுவது வானமாமலை ஜீயர் அருளிச் செய்தவைகள் :

1) திருப்பாவை ஸ்வாப தேசார்த்தம்
2) மாமுனிகள் விஷயமாக அருளிச் செய்த குணவகுப்பு என்ற 17 பாசுரங்கள் கொண்ட ஆர்த்திப்ரபந்தம்
3) நாச்சியார் திருமொழிக்கு "கோலச்சுரிசங்கு" என்ற தனியன்
4) "கோவில் உலகாசிரியன் கூரகுலோத்தம தாசர்" எனும் முமுக்ஷுப்படி தனியன்;
5) "செந்தமிழ் வேதியர்" எனும் மாமுனிகளின் ஐப்பசி திருமூல நாள் பாட்டு.
6) சரமபர்வ நிஷ்டையை உடைய சின்னி அம்மாள் என்பவரின் அத்யவஸாயத்தை அறிந்து உகந்து அவ்வம்மையாருக்கு பரமபதம் (புருஷாகாரமாக) ப்ரஸாதித்தார் என்பது சின்னியம்மாள் ரஹஸ்யம் என்பதால் ப்ரஸித்தம். ★




EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

